29. ன்று கன்மத்தைத் தான் கருதி மணிமாடக் களக்குடிக்
30. கணியாகிய அழகமைஞ்ச விழுச்சிறப்பி லந்தமில்
31. லா அரிகேசரி ஈசு$_0$வர முதலாக சந்திரசே$_0$க$_2$ரர்க்காய் த

**இரண்டாம் ஏடு - பின்பக்கம்**

32. ன் ச$_0$ஸ்தமாயின பல செய்வித்து ஹ்ரண்ய க$_3$ர்ப$_4$முந் துலாபா$_4$ரமு
33. ம் மென்றிவையும் புக்கினிசிருந்து மண்ணகத்து மஹிபா
34. லரோடு மஹஜந மகிழ்ந்தளிப்ப ஒற்றை வெண்குடை இரட்டை
35. ச் சாமரை கொற்றவன் பொற்றேர்மாறன் ராஜ்யவரிஷ முப்பத்தாறா
36. வது பாற்பட்டுச் செல்லாநிற்பத் தன்மமேய் தனக்கென்று க
37 ன்மமாகத் தான் கருதி கங்கையோடு நேரொக்குங் காவிரியி
38. ன் கரைமேலது தெங்குங் கமுகுங் குலை வ[ா]ழையுந் தேமாவு
39. ந் தீம்பலவும் அங்கங்கே யிலைக்கொடியு மளவளாவப்
40. பொலிவெய்தி அருமறையோர்க் கிடமாகிய பெருமருதூர்ப்
41. பிறப்பெய்தி நான்மறையு முத்தீயும் அம்புரியு மாறங்க
42. மும் மேன்முறையில் வழுவாத பதினெட்டுத் தருமங்களு ச$_0$ர்வ
43. சா$_0$ஸ்த்ர முதலாகியதற்யோக புராணங்களு வேத$_3$ாந்தமு ஸித்$_3$தாந்தமு
44. ம் வினியோகமும் வல்லராகிய பா$_4$ரத்$_3$வாஜ கோ$_3$த்திரத்து நாரா
45. யண ப$_4$ட்டஸோமயாஜியார்க்கு அலைகடல்சூழ் வையகத்துக் க
46. ணியாகிய ஆசிநாட்டுக் கம்பலை யென்னு மறவனை வெறி
47. ந்து அவன் காணி கோப்பற்றாய்க் காடுகொண்டு கிடந்ததனை

**மூன்றாம் ஏடு - முன்பக்கம்**

48. இளையான்புத்தூரென்று பேரிட்டு உத்தரமயனத்தின்[கட்] காராண்மை மீ
49. யாட்சி உள்ளடங்க ப$_3$ரஹ்மதே$_3$யமாக உத$_3$க$_3$பூர்வ்வஞ் செய்[தா]ன் பராங்குச
50. ன் மற்றிதற்குப் பெருநான்கெல்லைத் தெற்றென விரித்துரைக்கில் கீழெல்
51. லை ஒழுகுகல்லுக்கும் பெரும்பாறைக்குந் நெடுங்க[ளருக்கு] மேக்கும்ந் தென்
52. னெல்லை கூட்டக்கல்லுக்கும் உமிப்பறைப்பொற்றை முரம்புக்கு வடக்கு
53. ம் மேலெல்லை ஆனசாய்ஞ்சான்வாட்டுக்கு நிலப்பாறைக்குந் நெடுங்களருக்
54. குந் திரளைக்கல்லுக்குக் கிழக்கும் வடவெல்லை மணிக்கற்களுருக்
55. குஞ் சிறியாளெறிச்சிலுக்கும் எயிற்பொற்றைக்குத் தெற்கும் இ
56. ந் நான்கெல்லை யுட்பட்டது ஸர்வ்வ பரிசாரஞ் செய்து மற்றிதனைக் காத்தான்

57. மலரடி என்முடி மேலன்று கொற்றவன் பணித்தருளத் தெற்றென தாம்ரச$_0$ா

58. ஸநஞ்செய்தான் மற்றிதனுக்கு ஆணத்தி பட்டான் அண்டநாட்டுக் குண்டூர்

59. கூற்றத்துக் குண்டூர்க் குமான்தாயனை வடதரனாற் பணிக்கப்பட்டது

60. ப்$_3$ரஹ்மதே$_3$ய பரிபாலநாத்ர தே$_3$நந்ய த$_3$ஸ்தி பு$_4$வித$_4$ கர்ம்ஸாத$_4$நம் ஒஸ்யசாப

61. ஹரணாத்ர தேதமாநாந்ய த$_3$ஸ்தி பு$_4$விபால ஸாத4நம் ப$_3$ஹ்மஸ்வ ரக்ஷணா

62. த$_3$ந்யர் தஞ்ண்ய மூலந வித்$_3$யதே தஸ்யாதல ஜவநாத$_3$ ந்யர்தபாவ மூலந

63. வித்$_3$யதே ப$_3$ஹுப$_4$வ்வசு$_0$தா த$_3$த்தரராஜபி$_4$ ஸக$_2$ராதி$_3$ பி$_4$யஸ்ய யஸ்ய யத$_3$

64. பூ$_4$மிர்தஸ்ய தஸ்ய ஸதாப$_2$லம் பாண்டிப்பெரும்பணைக்கா[ர]ன் மகன்

65. அரிகேசரி கையெழுத்து.

## அடிக்குறிப்புகள்

1. தினமலர், நாளிதழ் 11-3-2007. நெடுமாறனின் செப்பேடுகளைக் கண்ணுற்று ஆய்வுசெய்ய அன்புடன் உதவியவர்கள் புலவர் செ.இராசு மற்றும் எம்.விஜயகுமார் ஆவார்கள்.

2. பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். xii.
K.V.இராமன் தனது பாண்டியர் வரலாறு என்னும் நூலில் நெடுமாறன் கி.பி.642ல் ஆட்சிக்கு வந்ததாகக் கருதுகின்றார். பக். 62.

3. இக்கல்வெட்டு தற்போது மதுரை மீனாட்சியம்மன் கோயிலில் உள்ள ஆயிரங்கால் மண்டபத்து அருங்காட்சியகத்தில் உள்ளது. இக்கல்வெட்டினை திரு.K.G.கிருஷ்ணன் அவர்கள் நெடுமாறனின் தந்தையின் கல்வெட்டாகத் தவறாகக் கணித்தார். திரு.இரா.நாகசாமி இது நெடுமாறனுக்குரிய கல்வெட்டு என்று மீளாய்வு செய்து வெளிப்படுத்தினார்.

4. SII. vol. XIV. Nos. 1, 2.

5. இக்கல்வெட்டுகள் கள ஆய்வில் தற்போது கண்டறியப்பட்டுள்ளன.

6. இச்செப்பேட்டிலுள்ள வடமொழி வாசகங்களுக்குப் பொருள் கூறி விளக்கம் தந்து துணைபுரிந்தவர் திருவேடகம் விவேகானந்தர் கலை அறிவியல் கல்லூரி சமஸ்கிருத பேராசிரியர் திரு.சி.ஆர்.அனந்தராமன் ஆவார்.

7. செ.மா.கணபதி, 'திருமங்கலக்குறிச்சி' தமிழ்நாட்டு வரலாற்றுக் கருத்தரங்கு, வரலாற்றுப்பேரவை, சென்னை, 1979, பக். 189-196.

8. இச்செய்திகளைப் பராந்தக வீரநாராயணனின் தளவாய்புரம் செப்பேடு மூலம் அறியமுடிகிறது, பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 106-107.

9. பாண்டியர் செப்பேடுகள் பத்து, பக். 73.

# 2. தாதப்பட்டியில் தமிழ்-பிராமி எழுத்துப் பொறிப்பு பெற்ற நெடுநிலை நடுகல்

கா.ராஜன், தஞ்சாவூர்
வி.பி.யதீஸ்குமார், தஞ்சாவூர்

திண்டுக்கல் மாவட்டம் நிலக்கோட்டை வட்டத்தில் அமைந்துள்ள தாதப்பட்டி என்ற சிற்றூரில் தமிழ்பிராமி நடுகல் ஒன்று அண்மையில் கண்டுபிடிக்கப்பட்டது. தாதப்பட்டி வைகை ஆற்றின் தென்கரையில் வத்தலக்குண்டிலிருந்து தெற்கே 16 கி.மீ. தொலைவிலும், ஏற்கனவே சங்ககால நடுகல் கண்டறியப்பட்ட ஆண்டிப்பட்டியிலிருந்து வடகிழக்கே 24 கி.மீ. தொலைவிலுள்ள புலிமான்கோம்பையில் இருந்து கிழக்கே 5 கி.மீ. தொலைவிலும் அமைந்துள்ளது. புலிமான்கோம்பை நடுகற்கள் பற்றிய செய்தி ஏற்கெனவே வெளியிடப்பட்டுள்ளது. (ஆவணம் இதழ் 17, 2006 ப. 1-5).

இந்நடுகல் 180 செ.மீ. உயரமும் 60 செ.மீ. அகலமும் கொண்டதாகும். இந்நடுகல்லின் தலைப்பகுதி உடைந்துபோய் உள்ளது. ஆதலால், இந்நடுகல்லின் உயரம் 2 மீட்டருக்கு மேல் இருந்திருக்க வேண்டும். இந் நடுகல்லின் உயரத்தைக் கணக்கில் கொண்டால் சங்க இலக்கியத்தில் குறிப்பிடும் "நட்டபோலும் நடாநெடுங்கல்" (அகம்:269) என்ற வகையைச் சேர்ந்ததாக இருக்கலாம். இரும்புக்காலப் பண்பாட்டில் காணப்படும் ஈமச்சின்னங்களில் ஒன்றான மென்ஹிர் (menhir) என்றழைக்கப்படும் நடுகல் வகையைச் சார்ந்ததாகும். ஈமச்சின்னத்தின் ஓரத்தில் இக்கல் நடப்பட்டிருந்ததாக ஊகிக்கலாம்.

இந்நடுகல்லின் தொடக்கப்பகுதி உடைந்துபோனதால், இதன் தொடக்கத்தை அறிய இயலவில்லை. எஞ்சியுள்ள பகுதி **"ன் அடிஓன் பாகல் பாளிய் கல்"** என்ற ஒரே வரியில் உள்ளது. ஒரு தலைவனின் (தலைவனின் பெயர் உடைந்து போய் உள்ளது) அடியோன் ஆகிய பாகல் என்பவர்க்கு உருவாக்கிய ஈமச்சின்னத்திற்காக எடுக்கப்பட்ட கல் என்று பொருள் கொள்ளலாம். தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் (நூற்பா. 25) "அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினுங் கடிவரை இல புறத்தென்மனார் புலவர்" எனக் குறிப்பிடுவதிலிருந்தும், பரிபாடல் (அடியுறை மகளிர், பரிபாடல் 8:43) "முடியா நுகர்ச்சி முற்றாக் காதல் அடியார் மைந்தர் அகலத் தகலா" எனக் குறிப்பிடுவதிலிருந்தும், சிலப்பதிகாரம் (16;85) "குடிமுதற் சுற்றமும் குற்றிளையோரும் அடியோர் பாங்கும் ஆயமும் நீங்கி" எனக் குறிப்பிடுவதிலிருந்தும், இந்நடுகல் குறிப்பிடும் **"அடிஓன்"** என்பது அடிமக்களைக் குறிப்பதாகக் கொள்ளலாம். "பாளிய்" என்ற சொல் தமிழ்-பிராமி பொறிப்புகளில் மிகுதியாகக் காணப்படுகிறது. அவற்றில் பெரும்பாலும் இச்சொல் குகைப் பகுதியைக் குறிக்கும் அத்துடன் குழி, குட்டை, சுனை போன்ற குழிவான இடங்களைக் குறிக்கவும் இச்சொல் வழங்கியது. நடுகல்லில் இது ஈமச்சின்னத்தைக் குறிப்பதாகலாம்.





.. .. ṉ a ṭi ō ṉ pā ka l pā ḷi y ka l

.. .. ன் அடிஓன் பாகல் பாளிய் கல்

# 3. குடுமியான்மலை பழங்கல்வெட்டு

**கரு. இராஜேந்திரன்,** மேலப்பனையூர்.

**இடம்** : புதுக்கோட்டை மாவட்டம் இலுப்பூர் வட்டம் குடுமியான்மலை மேலக்கோவிலின் அருகிலுள்ள இசைக் கல்வெட்டுக்கு தென் புறத்திலுள்ள சுனைக்குப் பக்கத்தில் பாறையிலுள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 6 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : [பரம] சேவகன் நக்கன். இக்கல்வெட்டிற்கு கீழே 10 ஆம் நூற்றாண்டு எழுத்தில் சில எழுத்துக்களில் ஒருவரி உள்ளது. கடைசியில் உள்ள எழுத்துகள் மேற்கல்வெட்டில் உள்ள சில எழுத்துக்களை ஒத்துள்ளன. ஒருவேளை பழைய கல்வெட்டின் மேல் பிந்தைய கல்வெட்டு பொறிக்கப்பட்டிருக்ககூடும்.

1. பரம சேவகன் நக்கன்.



# 4. குதிரை குத்திப்பட்டான் நடுகல்

நாக. கணேசன், கரூர்.

**இடம்** : பாம்படான் குளம் வடகரை, தோகைமலை, குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம்.

**காலம்** : கி.பி. 6 - 7 ஆம் நூற்றாண்டு, வட்டெழுத்து.

**செய்தி** : கல்வெட்டின் கீழ் குதிரைமீது அமர்ந்துள்ள வீரனோடு தரையில் நிற்கும் வீரன் போரிடும் காட்சி வரைகோட்டு உருவமாகப் பொறிக்கப்பட்டுள்ளது. குதிரை மீதுள்ள வீரன் தன்கையிலுள்ள ஈட்டியைக் கொண்டு தரையிலுள்ள வீரனைக் குத்த முற்படுவது போலவும், தரையில் நிற்கும் வீரன் தனது இடக்கையினால் குதிரையின் கழுத்தைப் பிடித்துத் தள்ளியப்படி வலக்கையிலுள்ள ஈட்டியைக் கொண்டு குதிரைமீது அமர்ந்துள்ள வீரனைக் குத்துவதுபோலவும் பொறிக்கப்பட்டுள்ளது. தொடூரில் நடைபெற்ற போரின்போது குதிரைமீது வந்து ஆநிரையைக் கவர்ந்த குதிரை வீரனை **சேந்தன் நந்தனார்** என்பவன் தடுத்து அக்குதிரை வீரனைக் குத்தி கொன்று தானும் இறந்து பட்டான். இறந்துபட்ட அவ்வீரன் நினைவாக எடுக்கப்பட்ட நினைவுக் கல்லே இக்குதிரை குத்திப்பட்டான் நடுகல்லாகும்.

1. தொடூரு ஆண்கொலி[தொ]று
2. ஊரேற்றுள் குதிரை குத்
3. தி பட்டாரு சேந்தனந்தனாரு



# 5. சோழன் தலைகொண்ட வீரபாண்டியனின் வட்டெழுத்துக் கல்வெட்டு

பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்.

**இடம்** : மதுரை மாவட்டம், உசிலம்பட்டி வட்டம், ஆனையூர் ஐராவதேசுவரர் கோயிலின் திருச்சுற்றில் உள்ள தனிக்கல்.

**காலம்** : சோழன் தலைகொண்ட வீரபாண்டியன், யா. 10 (1+9), (கி.பி. 956).

**செய்தி** : இங்குள்ள கல்வெட்டுகளில் மிகவும் பழமையானதாகக் காணப்படும் இம்மன்னனின் 10 ஆம் (4+6) ஆட்சியாண்டைச் சேர்ந்த இரண்டு வட்டெழுத்துக் கல்வெட்டுகள் ஏற்கெனவே படியெடுக்கப் பட்டுள்ளன. (இகஆ. 338, 339/1961-62). இக்கல்வெட்டின் வாயிலாக ஆனையூரின் பழைய பெயர் திருக்குறுமுள்ளூர் என்பதும், இது பாண்டிய நாட்டின் தென்கல்லக நாட்டுப் பிரிவில் இருந்தது என்பதும், உயர் அரசு அலுவலரான அழநாட்டைச் சேர்ந்த தென்னவன் பல்லவரையன் என்ற கோவன் என்பவர் மகாதேவனுக்காக ஒரு நந்தாவிளக்கினையும் அவ்விளக்கு இரவும் பகலும் தடைபடாமல் எரிவதற்குத் தேவையான நெய் வழங்க 50 ஆடுகளையும் இவ்வூர் கோயிலுக்குக் கொடையாக வழங்கியமையும் தெரிவிக்கிறது. கல்வெட்டின் இறுதிப்பகுதி தெளிவில்லாமல் உள்ளது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சோழன் றலைகொண்ட கோவீர
2. பாண்டியர்க்கு யாண்டு க இதனெதிர் 9 [இவ்
3. வாண்டு] தென்கல்லக நாட்டுத் திருக்கு[று
4. முள்]ளூர்த் தேவர்க்கு அழநாட்டு....
5. ....தென்னவன் பல்லவரையனாஇன
6. [கோ]வன் மாதேவனைச் சாத்தி[ய்]
7. வச்ச திருநொந்தா வி
8. ளக்கு ஒன்று இரவும் பகலுமுட்டா
9. மல் எரிவதாக வச்ச சாவாமூவாபே
10. ராடு ருய அய்ம்பதுங் கொண்டு மு
11. ட்டாமல் அட்டுவதாக இவ்வாடு
12. ....... நாட்டு இன்னிவார.....
13. ..... ன் சிரியான் தேவ அரையன்
14. கைக்கொண்டு இந்நாயனார்
15. [திருக்குறுமுள்ளூர்த் தே
16. வர்]க்கு அட்டுவா.........

# 6. திண்டுக்கல் பகுதியில் சில கல்வெட்டுகள்

நாக. கணேசன், கரூர்.

6 : 1

**இடம்** : பழைய கரட்டுப்பட்டி, வேடசந்தூர் வட்டம், திண்டுக்கல் மாவட்டம் சிறுமலை தெற்கு அடிவாரம், கன்னிமார் கோயில் பகுதியிலுள்ள நடுகல்.

**காலம்** : கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டு. எழுத்து தமிழ்.

**செய்தி** : மதுராந்தகப் பள்ளிவேளான் அரையரைப் பள்ளிநாட்டு உட்பகுதிவரை தள்ளித் துரத்திச் சென்று போரிடுகையில் இறந்துபட்டான் என்று கல்வெட்டு கூறுகிறது.

1. ஸ்ரீ அரையரை த
2. [ள்]ளி தொறுத்தி
3. னான் மதுரா
4. ந்தகப் பள்
5. ளிவேளான் ப
6. ள்ளி நாட்டுள்
7. கைபோக மீளப்
8. பட்டான்

6 : 2

**இடம்** : தொட்டனம்பட்டி, வேடசந்தூர் வட்டம். கண்மாயின் வடமேற்கு மூலையிலுள்ள சிறிய பாறை.

**காலம்** : கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டு. தமிழ் எழுத்து.

**செய்தி** : ஐந்நூற்றுவர் வீரசேகரர் குளம் செய்தமை.

1. ஸ்ரீபெரும்பள்ளிப் பெருங்குளம் தலை
2. யார் ஐந்நூற்றுவர் வீரசேகரர் பேர்



பழைய கரட்டுப்பட்டி கல்வெட்டு

# 7. நடுகல், செக்கு கல்வெட்டுகள்

வெ. பாண்டுரங்கன், கீழ்க்கல்பூண்டி.

7 : 1

**இடம்** : வைரிச்செட்டிப்பாளையம் திருச்சிமாவட்டம் (துறையூர்ப் பகுதி), வேடன்கலிங்கு அருகே உள்ள நடுகல்.

**காலம்** : கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு

**செய்தி** : நிரைகளை வேட்டுவர் கவர்ந்து சென்றபோது ஏற்பட்ட பூசலில் இறந்துபோன வீரன் பற்றித் தெரிவிக்கிறது.

1. ஆய்ப்பாடிநிரை வே
2. டுவர் கொடுபோக எயிது ப
3. ட்டார் திருநாணமுறை
4. த....
5. இது தீ....
6. குசெய்வா
7. ன் தாய்க்....
8. கு மி
9. ணளாந்



7 : 2

**இடம்** : கூடலூர், குளித்தலை வட்டம், கரூர் மாவட்டம், வயலில் உள்ள செக்கு.

**காலம்** : கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு.

**செய்தி** : பிடாரன்மல்லன் செக்கு செய்வித்ததைக் கூறுகிறது.

1. ஸ்ரீ பிடாரன் மல்லன் செக்கு



# 8. பத்தாம் நூற்றாண்டு பாண்டியர் கல்வெட்டு

கு. சேதுராமன், மதுரை

**இடம்** : மடப்புறம், திருப்புவனம், மடப்புறம் காளிகோயிலுக்குச் செல்லும் வழியில் உள்ள கோயில் சுவர்.

**காலம்** : கி.பி. பத்தாம் நூற்றாண்டு, சடையன் மாறன்? வட்டெழுத்து.

**செய்தி** : மண்ணூர் விளந்தை சூரனான தென்னவன் (அணுக்க)ப் பல்லவரையன் என்பவன் (திருபூவணம்) கோயிலில் நிலைவிளக்கு ஒன்று எரிப்பதற்காக ஐம்பது ஆடுகள் தானம் அளித்ததைக் கூறுகிறது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ.....
2. .....யர்க்கு.....
3. .....இதன்.....
4. ண்புந.....
5. .....யஇ(அ).....
6. .....ணத்துபடாரர்க்கு.....
7. .....டுமண்ணூர் விளந்தை சூர
8. ன்நாஇன தென்னவன்(அ)
9. .....ப்பல்லவரையன் வைய்த்த
10. .....ருநிலை விளக்கொன்றினுக்கு
11. .....பகலும் இரவும்முட்டா
12. (ம)ல் எரிவதாக வைய்த்த ஆடு
13. அய்ம்பதுங்கொண்டு இ
14. சாவாமூவாப் பேராடாகக் காத்து
15. வைய்ச்சு நியதி சோழியத்தா
16. ல் உழக்கு நெய்முட்டாமல்
17. எரிவதாகவும் இந்நெய்அ....
18. ன் இவ்வூர்தேவர் வெட்டிக்
19. குடி சேந்தன் கரந்தன்இ
20. .....இந்நெய் அ.

# 9. கொங்குநாட்டுச் சேரன் வீரநாராயணன் கல்வெட்டு

வி.ப. யதீஸ்குமார், தஞ்சாவூர்.

**இடம்** : ஈரோடு மாவட்டம், பவானி வட்டம் பெருந்தலையூர் சிவன் கோயிலிலுள்ள தனிக்கல். அண்மையில் பவானியாற்றில் கிடைத்தது.

**காலம்** : வீரநாராயணன், யா. 20, பத்தாம் நூற்றாண்டு.

**செய்தி** : காஞ்சிக்கூவ நாட்டிலுள்ள தேவதான பிரமதேயமான பெருந்தலையூர் மகிழ்வநமுடைய மஹாதேவர் கோயிலும் (கருவறை) அர்த்தமண்டபமும் குறுப்பிநாட்டுத் திங்களூரிலிருக்கும் வெள்ளாளரில் வண்ணக்கர் கூட்டத்தைச் சார்ந்த வண்ணக்கன் பெரியான் அணுக்கநம்பி என்பவன் செய்தமை.

1. ஸ்வஸ்தஸ்ரீ வீரநாராயண தேவர்
2. க்கு யாண்டு இருபதாவது குறுப்
3. பிநாட்டு திங்களூரிலிருக்கும் வெள்
4. ளாளந் வண்ணக்கரில் வண்ணக்கந்
5. பெரியாந் அணுக்கநம்பியேந் கா
6. ஞ்சிக்கூவ நாட்டில் தேவதாந ப்3ர
7. ஹ்மதேயம் பெருந்தலையூர் மகிழ்
8. வநமுடைய மஹாதேவர் கோ
9. யிலும் அத்தமண்டபமும் பிறம்
10. [பில்.] மண்டபம்...



# 10. சில புதிய கல்வெட்டுகள்

சீ. வீரராகவன், விழுப்புரம்
மங்கையர்க்கரசி வீரராகவன், விழுப்புரம்.

10 : 1

**இடம்** : தாமல், ஊருக்குக் கிழக்கேயுள்ள அம்மன்கோயில் உள்ள நிலத்தில் காணும் நடுகல்.

**காலம்** : சுமார் கி.பி. 600.

**செய்தி** : வீரக்கல்

1. காவதியார் மகன்
2. ப[டு]வன்



10 : 2

**இடம்** : அரளி, உளூந்தூர்ப்பேட்டை வட்டம், அய்யனார்கோயிலுக்கு அருகிலுள்ள செக்கு.

**காலம்** : கி.பி. 10 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : செக்கு இட்டமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ அம்களரி உடைய தாயன் அபத்தரன் இட்ட செக்கு பிடாரிக்கு எண்ணை ஓர் உழக்கு.

10 : 3

**இடம்** : நயினார்பாளையம், வேப்பூரிலிருந்து சேலம் செல்லும் வழியில் உள்ளது. இவ்வூரிலுள்ள நத்தமேட்டில் உள்ள கல்செக்கு.

**காலம்** : கி.பி. 10 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : செக்கு இட்டமை.

1. ஸ்ரீகரணநல்லூர் காணி உடையவனான கார்குணமாலையார் இடுவிச்சசெக்கு

10 : 4

**இடம்** : குன்னத்தூர் (திருக்கோயிலூர்வட்டம்) ஏரியிலுள்ள தூம்பு.

**காலம்** : வீரராஜராஜதேவர், (மூன்றாம் குலோத்துங்கன்), 1182.

**செய்தி** : தூம்பு அமைத்தமை.

1. ஸ்ரீதிரிபுவனசக்கர
2. வர்த்திகள் ஸ்ரீ சீவீரரா
3. ஜராஜதேவர்க்கு யா
4. ண்டு 4வது குன்ற
5. த்தூருடையான் பட்டன்
6. பேராயிரமுடையா
7. ன்கண்ட தூம்பு மதும
8. ஈஸ்வர வா
9. ணாதி நீ
10. ல கங்க
11. ன் அமைத்த
12. தானம் ந
13. ம்பியூரான்

10 : 5

**இடம்** : குன்னத்தூர் ஏரியிலுள்ள தூம்பு.

**காலம்** : கோபணஉடையார், இராசநாராயணன் சம்புவராயன், 14 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இராசநாராயண சம்புவராயன் அகப்பரிவாரமுதலி தம்பி மாணக்கநாயன் எல்லாந்தலையன் என்பவன் மதகு அமைத்தமை...

1. ஸ்ரீசுபமஸ்து கோப
2. ண உடையார் நாளி
3. ல் இம்மதகு கண்டா
4. ன் இராசநாராயணன்
5. சம்புவராய
6. ன் அகப்பரி
7. வாரமுதலிக
8. ளில் ஆதிநந்கழல்
9. பெருமான் கண்
10. மயதேவந் தம்பி மா
11. ணக்கநாயன்
12. எல்லாந்தலை
13. யன் கண்மய தே
14. வன் கண்ட தன்
15. மம்உ.

10 : 6

**இடம்** : தண்டுரை, விஸ்வநாதர் ஆலயம், தரையில் பாவப்பட்ட கல்.

**காலம்** : முதலாம் இராஜராஜசோழன், 992.

**செய்தி** : இவ்வூர் மகாதேவருக்கு மூன்று காலப்பூசைக்கு (ஸ்ரீ பலிகொட்ட) வரிநீக்கி இடைப்பட்டிலும் பனைப்பட்டிலும், அரைமாநிலமும், அய்வைபட்டில் முக்கால் செறு நிலமும், கூத்தன்பட்டி (தடி) ஒன்றை செறு நிலமும், கொடையாக வழங்கப்பட்டது. சாவாமுவா பேராடும் கொண்டு அன்றாடம் மூன்று காலப் பூசை நடத்த வேண்டும் என்று கூறுகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோ
2 ராஜராஜகேஸரி ப
3. ரு மற்(கு) யாண்டு ஏழாவது
4. புழல் கோட்டத்து அம
5. றூர் நாட்டு கோவீர ஸ்ரீ சேந்த
6. மங்கலமாகிய தெண்டுரை
7. சபையோம் எம்முர் மஹா
8. தேவற்கு இறை இழிதி ஸ்ரீ பலி
9. கொட்ட வைத்த -மிளரிவீடு இ
10. டைப்பட்டியும் பனைப் ப
11. ட்டியும் சிறுமனைகால் அரைய
12. மா கூத்தன்பட்டித் தடி இ
13. ரண்டுமாய்ப் பட்டியும் சி
14. ங்க விசையரையன் முக்காலு
15. ம் முக்காற் செறுவுமாக ஒன்ற
16. ரையும் ஆக அய்வை பட்டி
17. நிலமும் மூன்று ஸந்தியு
18. ம் ஸாவா மூவாமை பேராடு கொ
19. ண்டு ஸ்ரீ பலி கொட்ட வை
20. த்த சோம ஸபையோம் எழு-
21. பதே சிவன் (செரு வே-க்க) இ

# 11. கொங்கு தொண்டைநாட்டுப் பகுதிகளில் சில புதிய கல்வெட்டுகள்

சு. இராசவேலு, சென்னை.

11 : 1

**இடம்** : நாமக்கல், நாமக்கல் மாவட்டம். நாமக்கல் மலை மீது உள்ள கோட்டைப் பாறையில் உள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 6 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : ஆட்பெயர். இம்மலையின் குடைவரைக் கோயில்களுக்கு அருகில் தச்சர்கள் மற்றும் பிற ஆட்பெயர் கல்வெட்டுகள் ஆவணம் இதழில் பதிவாகியுள்ளன. அதன் தொடர்ச்சியாக இம்மலை உச்சியில் உள்ள கோட்டைப் பகுதியைக் களஆய்வு செய்தபொழுது சில ஆட்பெயர்கள் கண்டுபிடிக்கப்பட்டன. சில பொறிப்புக்கள் மிகவும் அழிந்த நிலையில் மெல்லிய கீறல்களாக உள்ளன. தமிழ் எழுத்து வளர்ச்சியுறத் தொடங்கிய கால கட்டம். அவற்றுள் ஒன்று படிக்கக்கூடிய நிலையில் உள்ளது. 'இளணிகந்' என்று படிக்கவும் வாய்ப்பு உள்ளது.

1. இளவதிகந்



11 : 2

**இடம்** : அயலூர், கோபிச்செட்டிப்பாளையம் வட்டம், ஈரோடு மாவட்டம்.

**காலம்** : விரவல்லாள தேவர் (கி.பி. 13 ஆம் நூற்றாண்டு).

**செய்தி** : வடப்பரிசார நாட்டில் உள்ள நம்பியூர் திருவிக்ரம விண்ணகரப் பெருமாளுக்குக் குறுப்புநாட்டு அயிரியூர் ஊரை இறையிலியாக அளித்த செய்தி.

முன்பக்கம்

1. ஸ்வஸ்தி ஸ்ரீ வீரவல்லா
2. ள தேவர் பிருத்வி ராஜ்ய-
3. ம் பண்ணி
4. அருளா நின்ற ப்ரமாதிஸ-
5. ஸம்வத்ஸ்ஸரத்து சித்திரை மாத முதல் வ-
6. ட பரிசார நாட்டு நம்பி பெரு-
7. நாயிநார் திரிவிக்ரம விண்
8. ணகரெம்பெருமானுக்கு குறு-

பின்பக்கம்

9. ப்பு நாட்டு அயிரியூர்
10. முதலடங்கல் இறையி-
11. லி ஆக சந்திராத்தித்தவர்
12. திருவிடையாட்டம்

**11 : 3**

**இடம்** : காரகப்பாடி, சத்தியமங்கலம் வட்டம், ஈரோடு மாவட்டம், மஞ்சள் தோட்டத்தில் நடப்பட்டுள்ள கற்பலகை, இரு பக்கங்களிலும் கல்வெட்டு பொறிக்கப்பட்டுள்ளது.

**காலம்** : இரண்டாம் ஹரிஹரர்; சக ஆண்டு 1352; சாறுவரி வருஷம், (கி.பி. 1430) சக ஆண்டு தவறாகக் குறிக்கப்பட்டுள்ளது. சக ஆண்டு 1342ல் தான் (கி.பி. 1420) சாறுவரி வருஷம் வந்துள்ளதால் 10 ஆண்டுகள் அதிகமாக இக்கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளது.

**செய்தி** : விஜயநகரப் பேரரசர் இரண்டாம் ஹரிஹரராயர் காலத்தில் அழுக்குக்குழியில் உள்ள திருவேங்கடமுடையார் கோவிலுக்கு திருவிடையாட்டமாக காரகப்பாடி ஊரை மண்டலேஸ்வரன் ஆகிய குங்குமராய உடையார், காமனராச உடையார் அழுக்குக்குழி காணியாளர் அளித்துள்ளனர். அழுக்குக்குழி காஞ்சித்தூவல் நாட்டில் இராஜராஜபுரத்திற்குச் செல்லும் பெருவழியில் உள்ளது.

முன்பக்கம்

1. ஸ்ரீமந் மகா மண்டலேசு-
2. வரந் ஸ்ரீ விரதேவராய ம-
3. ஹாராயட்டரையரை ஸ்ரீ மர்
4. குமாரந் பிரதாப அரிஹர ரா-
5. யற்கு செல்லா நின்ற சக-
6. ப்தமாயிரத்து முன்
7. னூற்று ஐம்பத்திரண்டிந்-
8. மேல் செல்லா நின்ற சா-
9. றுவரி வருஷத்து சித்திரை
10. மாத மிரண்டாந் தியதி ஸ்ரீ
11. மந் மஹா மண்டலேசு-
12. வரந் ஸ்ரீ விரகுங்கும ராச-
13. ய உடையரும் காமனராச
14. உடையரும் அழுக்குக்கு
15. ழியில் காணியாளரும்
16. இராஜஇராஜபுரத்துக்கு செல்-
17. லும் காஞ்சித்தூவல் நாட்டு

பின்பக்கம்

18. அழுக்கற்குழியில்......
19. டி அழுக்கற்குழியில் பெருமா-
20. ள் திருவேங்கடமுடையாற்க்கு தி-
21. ருவிடையாட்டமாக தாரை
22. வாத்துக் குடுக்கயில் இந்த ஊ-
23. .ற் நஞ்சை புஞ்சைபட்டி தோட்ட-
24. ம் மேநோக்கியமரம் கிணோ-
25. க்கிய கிணறு வாசல் மனை
26. மற்றும் பல உபாதியும் காணி
27. க்கையு முட்பட்ட இவற்கு திருவி-
28. டையாட்டமாக குடுத்த அள-
29. வுக்கு இந்தவூர் இவற்கு சந்திரா-
30. தித்தைவரை நடக்க கடவ
31. தாகவும் இந்த தன்மத்துக்
32. கு அஹிதம் நினைத்தவனும் டை-
33. கய [டசை...] யாசைப்பட்டவ-
34. னும் யிவனுமிவன்வங்ஸ
35. மும் ஏழுஏழு ஐந்மாந்திரமும் செ-
36. கங்கைக் கரையிலே ஹ
38. த்தி வினைக்கு மேர் பூர்வ மண்-
39. .... மால் வதையா.... ள்ளி பளு-
40. ம் ..... பாதகங்களிலும் குரு
41. துரோகஞ் செய்த பாவத்திலும் புக-
42. க் கடவனாகவும் இந்த தன்மம்
43. இரக்ஷத்தவல் ஸ்ரீ வைகுண்ட-
44. த்திலே பரமாபதத்திலே இருக்க
45. [க்] கடவநாகவும் [11*]

**11 : 4**

**இடம்** : செங்காளிப்பாளையம், கரூர் அருகில் உள்ள செங்காளிபாளையம் ஊரில் பாழடைந்த சிவன்கோவில் மேட்டில் உள்ள தனிக்கல்.

**காலம்** : கி.பி. 9 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : இக்கல்வெட்டு இருமொழிக் கல்வெட்டாகும். முதற்பகுதி தமிழிலும் இரண்டாவது பகுதி வடமொழியில் கிரந்த எழுத்திலும் எழுதப் பட்டுள்ளது. தென்னவன் வஞ்சி வேளான் ஆகிய இரவி குவாவன்

என்பவரின் மனைவி நிறந்தேவியார் ஐம்பது பொன் குடுத்து புதுப்பெருவாய் கிழக்குடையூர் என்னும் ஊரில் உள்ள கடறு சாற்றிய முருக்கத்தரை நிலம் கால் செய்யை விலைக்கு வாங்கி அவ்வூரின் திருமூலட்டானத்து தேவர்க்கு நந்தாவிளக்கிற்காகவும் திரு அமிர்த்துக்கும் கொடுத்துள்ளார். இச்செய்தி வட மொழியிலும் கூறப்பட்டுள்ளது. இக்கல்வெட்டில் கூட்டெழுத்துக்களுடன் புள்ளி பெற்ற மெய்யெழுத்துக்களும் உள்ளன.

1. ஸ்ரீ தென்னவன் வஞ்சி வேளாஇன-
2. இரவிகுவாவன் மணவாட்டி
3. நிறந்தேவி வஞ்சி வேளார்க்கேய்
4. ஐம்பதுப் பொன் குடுத்துப் பு-
5. துப் பெருவாய்க் கீழக்குடையூர் மு-
6. ருக்கத்தரைக் கடறு சாற்றிய காற்செய்யு-
7. ம் விலைக்குக் கொண்டிவ்வூர்த் திருமூ-
8. லட்டானத்து மாதேவர்க்கு ஒரு நொந்தாவி-
9. ளக்கினுக்கும் திருவமிர்தினுக்குமாகக் கு-
10. டுத்தாள் நிறந்தேவி பந்மாஹேச்வர காவல்
11. பாத$_3$ நிவர்த்தநஸ்யாதா$_3$ ச்ச$_2$ த்ரக்$_3$ ரா மே பி
12. நாகிநே வஞ்சிவ்ரிஷ்ணேகு$_3$ ஹா$_4$ ப$_4$ ஸ்ய தே$_3$-
13. வி தே$_3$வீதி கீர்த்திதா ஸ்வஸ்தி



11 : 5

**இடம்** : பௌத்திரம், கரூர் வட்டம், மாவட்டம். ஊரில் உள்ள ஒரு கிணற்றின் உள்பகுதியில் வெட்டி வைக்கப்பட்டுள்ள கல்வெட்டு.

**காலம்** : பாண்டியர் வீரபாண்டியதேவர். ஆட்சியாண்டு 22+9 (13 ஆம் நூற்றாண்டு).

**செய்தி** : சிவன் கோவிலுக்குத் திருமஞ்சனக்கிணறு செய்வித்தது.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ வீரபாண்டி
2. தேவர்க்கு யாண்டு 22 எதிர் கொ-
3. ன்பது வீரசோழ மண்டலத்து பௌத்-
4. திரம் மல்ல. பாச்சில் நாயனார் தன-
5. ந்திசுரமுடைய நாயனார் திருமஞ்ச-
6. னக் கிணறு செய்வித்தேன் தட்டை[யூ]
7. ர் நாட்டுத் தெற்றியூர் வேளார்

11 : 6

**இடம்** : கருவாட்சி, விழுப்புரம் வட்டம் விழுப்புரம் மாவட்டம். குளம் அருகில் பாறையில் உள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : குளம் வில்லி சீருடையான் வெட்டிவைத்தமையைக் குறிக்கிறது.

1. ஸ்ரீ இக்
2. குளம் வில்லி
3. சிருடையான்
4. தன்மம்.

11 : 7

**இடம்** : அருகில் மற்றொரு பாறையில் உள்ள கல்வெட்டு.

**காலம்** : கி.பி. 12 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : பாடல் கல்வெட்டு. வாணர் வீரப்பெருமாள் குறித்து புகழும் கல்வெட்டு.

1. தாரு முரசு முடியுந் தமக்குரியய்யாருமுடன் பெறுவர் பார்வேந்தந்
2. வீரப்பெருமாள் மகதேசன் பேரெழுதித் தத்தந் திருமார்பிலாளோலை செய்து
3. மகனிதுங்கன் வாணன் மகதைப் பெருமாளுக்கானை தந்து சோழன வனி பெற்றான்

4. பாணல்விழிக் கன்னியரைத் தந்துங் கழல் பணிந்தும் இவனை கொண்டும் வன்னமரும் பெற்றார் தமன்

11 : 8

இடம் : ஆரூர், ஆர்க்காடு வட்டம் வேலூர் மாவட்டம். புதைந்துண்ட பெருமாள் கோவிலின் குமுதப்படை.

காலம் : பராந்தக சோழன், (கி.பி. 941)

செய்தி : ஆரூர் சபையார் கோவில் பணியாளர்களுக்கு நெல் ஊதியமாக அளித்தமை.

1. ஸ்வஸ்தி ஸ்ரீ மதிரைகொண்ட கோப்பரகேசரி பந்மற்க்கு யாண்டு முப்பத்து நாலாவது பல்குன்றக் கோட்டத்து தனயூர் நாட்டுத் திருப்பாச்சூரயர்ப் புறத்து ஆரூர் ஸபையோம் எங்களூர் ஸ்ரீ கோவில் அஞ்சத்தர விண்ணகர பெருமாளுக்கு
2. ....வானுக்கு இருநாழி உரிஉம் குசவனுக்கு இருநாழி உரிஉம் அடுநங்கையார்க்கு முந்நாழிஉம் இப்பரிசு நிசதி நடைகொண்டு முட்டா-
3. மே ஊட்டுவோமானோம் ஸபையோம் இது முட்டில் கெங்கை இடைக் குமரி இடை செய்த பாவத்துப் படுவோம்-
4. மானோம் காவிரிப்பாத்தார் திருவடிப் பிழைப்போமானோம் அடுந்துகைக்கு ஆண்டுவரை இருகாடி ஊர்க்கல்லால் அட்டிக்-
5. குடுப்போமானோம் ஸபையோம்.

## 12. குட்டியாகவுண்டனூர் நடுகல்

இரா. ரமேஷ், தஞ்சாவூர்.

**இடம்** : சேலம் மாவட்டம், மேட்டூர் வட்டம், கொளத்தூரிலிருந்து சேத்துக்குழி செல்லும் சாலையில் உள்ள குட்டியாகவுண்டனூர் வேடியப்பன் கோயில்.

**காலம்** : கி.பி. 9-10 ஆம் நூற்றாண்டு.

**செய்தி** : தாழ்ஊரில் உள்ள கொடாடி என்பவர் இறந்ததன் நினைவாக அவரது மகன் கள்ளன் அவ்வூரில் கல்லெழுதி நட்டமை.

1. ஸ்ரீ கொடாடி தாழ்ஊர்
2. க்கற்பொறிச்சி நாட்
3. டுவித்தான் கொடாடி ம
4. கன் கள்ளன்



# 13. வாலிகண்டபுரம் வாலீஸ்வரர் கோயில் கல்வெட்டுகள்-I

இல. தியாகராஜன், அரியலூர்.

13 : 1

இடம் : வாலிகண்டபுரம் (வேப்பந்தட்டை வட்டம்) வாலீஸ்வரர் கோயில் கருவறைத் தென்சுவர் ஜகதி (தட்சணாமூர்த்தி கீழ்).

காலம் : முதலாம் பராந்தகன், யா : 3 (கி.பி. 910).

செய்தி : திருவாலீஸ்வரமகாதேவருக்கு அரைவிளக்கு எரியவைக்க அப்பினார்கள் என்பவர் மூன்று கழஞ்சுப்பொன் கொடையாக வழங்கியுள்ளார். இவ்விளக்கு வீரசோழப்பல்லவரையர் இக்கோயிலின் நிருவாகியாக இருந்தபோது வைக்கப்பட்டது.

1. ஸ்வஸ்திஸ்ரீ மதிரைகொண்ட கோப்பரகேசரிபன்(ம)க்கு ய(ாண்)டுமூந்றாவது திருவாலீஸ்வர மாதேவ
2. ற்க்கு அப்பினார்கள் வைத்த அரைவிளக்கால் பொன் முக்க்ழஞ்சரையால் நாராயத்தால் நிசதம் ஆழாக்கு
3. வீரசோழபல்லவரையர் ஆரா(ய்)ந்த விளக்கு.

13 : 2

**இடம்** : அர்த்தமண்டப வடக்குச் சுவர் குமுதம்.

***காலம்*** : *மேற்சுட்டிய மன்னன், அதே ஆண்டு.*

**செய்தி** : வன்னாட்டுப் பிரிதிகூரமங்கலம் என்ற ஊரின் சபையார் எழுதிய கல்வெட்டு இது. *பிரிதிகூரமங்கலத்தில்* இருந்த திருச்சிலாக் குன்றத்து கோயிலில் எழுந்தருளி இருக்கும் **திருக்கேட்டை கிழத்தியார் (ஜேஷ்டா தேவி)** எனும் இறைவிக்குத் திருவமுது, திருமெழுக்கு ஆகியவை இடுவதாக 5 கழஞ்சு பொன்னை ஊர்ச் சபையிடம் கடம்பன் நாகன் என்பவர் கொடையாக வழங்கி உள்ளார். இப்பொன்கொண்டு ஊருக்குத் தெற்கில் இரண்டரை மாநிலத்தை ஊர்சபை வழங்கியுள்ளது. இக்கல்வெட்டில் வரும் கடம்பன் நாகன் என்பவர் முதலாம் பராந்தகனின் இருபத்தொன்றாம் ஆண்டுக் கல்வெட்டிலும் இராசகேசரிவர்மனின் (கண்டராதித்தன் இகஆ. 298/64-65) கல்வெட்டிலும் குறிப்பிடப்படுவதால் மேலுள்ள பரகேசரிவர்மன் முதலாம் பராந்தகன் எனக் கொள்ளலாம். கல்வெட்டின் தொடர்ச்சியாக ஜகதிப்படையில் உள்ள வரிகளைக் (4, 5, 6) கொள்ளலாம். இவ்வரிகள் புரியும்படியாக இல்லை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிபர்ம்மற்க்கு யாண்டு ௲-ஆவது வன்னாட்டு பிரிதிசூரமங்கலத்து ஸபையோ
2. ம் ஊர்க்கு தெற்க்கில் கடம்பன் நாகன் குத்தல் செய் உரு மாவரை செய் திருச்சிலாக்குன்றத்து திருக்கேட்டை கிழத்தியா
3. ர்க்கு திருஅமிர்(து) ஒன்று திருமெழுக்கு இடுவதாக யாங்கள் கொண்டு கடவபொன் முதல் ஐங்கழஞ்சு இப்பொன்
4. ஊரின் தெற்கில் கடமபன்னாகை குளத்து கழஞ்சின் வாய்(பாப்) பொந்ஞ்சி நீக்கி நாற்
5. பது ஆக இருநூறு ஆண்டுஎடுத்து ஊரவன் எச்சில் சுவாகான் தண்டி ஊர்விக்கடவான் நிசதம் ..........
6. மன்றி ஊர்ப்பான்னான்

12 : 3

**இடம்** : கருவறை வடக்குச்சுவர் (பிரம்மா சிற்பக் கோட்டத்தின் மேற்கு)

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 5 (கி.பி. 912)

**செய்தி** : மிலாட்டுக் குறுக்கைக் கூற்றத்துத் திருக்கோவலூரைச் சேர்ந்த சங்கரன் என்பவர் இக்கோயிலில் அரைவிளக்கு எரிக்க மேலை நகரத்தாரிடம் 3½ கழஞ்சு பொன் கொடுத்து ஆழாக்கு எண்ணை வழங்கிட ஏற்பாடு செய்துள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோப்பகேசரிபற்மர்க்கு
2. யாண்டு ரு-வது வன்னாட்டு வாலி
3. கண்டபுரத்து திருவாலீஸ்வரத்
4. து மஹாதேவர்க்கு மிலாட்டுக் குறுக்கைக் கூற்ற
5. த்து திருக்கோவல்லூர் இருந்து வாழும் சங்க
6. றன்(ன)*வத்த அரைவிளக்கு ஒன்றினால் பொன் மு
7. க்கால் இப்பொன்னால் அட்டக்கடவர் மேலைனகரத்தார்
8. ஆழாக்கு அட்டக் கடவர்.

13 : 4

**இடம்** : அர்த்தமண்டப வடசுவர் குமுதம்

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 12 (கி.பி. 919).

**செய்தி** : இக்கல்வெட்டு முற்றுப்பெறவில்லை. மன்னரின் ஈழவெற்றியும் வன்னாட்டை ஆண்ட சிற்றரசர் அக்கோபுகழறையரும் குறிப்பிடப்படுகின்றனர்.

1. ஸ்வஸ்திஸ்ரீ மதுரையும் ஈழமும் கொண்ட கோப்பரகேசரி

2. பந்மர்க்கு யாண்டு யஉ வன்னாட்டு வாலிகண்டபுரத்து.... மஹாதேவர்க்கு வன்னா(டு) உடையான் அக்கோ

3. புகழ்முறை.

13 : 5

**இடம்** : அர்த்தமண்டப வடசுவர் குமுதம்.

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 14 (கி.பி. 921)

**செய்தி** : வன்னாட்டுப் பகுதியின் சிற்றரசரான அக்கோபுகழறையர் இக்கோயிலில் ஒரு நந்தா விளக்கெரிக்க 7½ கழஞ்சு பொன் கொடுத்தார். இதனைப் பெற்றுக் கொண்டு தினமும் உழக்கு நெய் வழங்க அனுக்கூரைச் சேர்ந்த நக்கன் அரட்டன் என்பவர் ஒப்புக் கொண்டமை.

1. ஸ்வஸ்திஶ்ரீ மதிரைகொண்ட கோப்பரகேசரிபன்மற்க்கு யாண்டு பதினாலாவது வன்னாடுடையார் அக்கோபுகழறையர்
2. வாலிகண்டபுரத்து திருவாலீஸ்வரத்து மஹாதேவர்க்கு வைத்த நொந்தா விளக்கொன்று ஒன்றினால் பொன் எழுகழஞ்சரை இப்பொன் எழுகழஞ்சரையாலு நாரா
3. யத்தால் நிசதி உழக்கு நெய் எண்ணை அட்டக்கடவான் அனுக்கூர் உடை நக்கன் அரட்டனேன் இது பன்மாஹேஸ்வர ரக்ஷை.

13 : 6

**இடம்** : கருவறை மேற்கு சுவர் (விஷ்ணு சிற்பம் வடக்குப் பத்தி)

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 15 (கி.பி. 922)

**செய்தி** : தஞ்சாவூர் கண்டருள்கண்டப் பெருந்தெருவில் வசித்த சங்கரப் பாடியான் மாறன்மாசாது என்பவர் இக்கோயிலில் ஒரு விளக்கு எரிக்க 7½ கழஞ்சுப் பொன்னை நகரத்தார் வசமளித்து தினமும் உழக்கு நெய் வழங்கிட ஏற்பாடு செய்துள்ளமை.

1. ஸ்வஸ்திஶ்ரீ மதிரைகொண்ட கோப்பரகேசரி
2. பன்மர்க்கு யாண்டு யரு - ஆவது
3. வன்னாட்டு வாலீ
4. ஸ்வரத்து மஹாதேவர்க்கு தஞ்சாவூர் கண்டருள் க
5. ண்டப் பெருந்தெருவில் சங்கரப்பாடியான் மா
6. றன் மாசாது வை(த்த) நொந்தாவிளக்கு ஒன்றுக்கு வைத்
7. த பொன் எழுகழஞ்சுக்கும் பலிசை நெய் எண்
8. ணை நிசதம் உழக்கு மட்டுவார் நகரத்தார் சந்தி
9. ராதித்தவரையும் பந்மாஹேஸ்வர ரக்ஷை.

13 : 7

**இடம்** : அர்த்தமண்டபத் தென்சுவர் குமுதப்படை (முதற்பத்தி கீழ் 1008 லிங்கம் உள்ள அறை).

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 19 (கி.பி. 926).

**செய்தி** : தஞ்சாவூர் கண்டருள்கண்டப்பெருந்தெருவில் வசிக்கும் சங்கரப் பாடியான் சேயான் உள்வேலி என்பவர் ஒரு விளக்கு எரியவைக்க ஏழு கழஞ்சுப் பொன் வழங்கியுள்ளார். கல்வெட்டின் இறுதிப்பகுதி மீது சுவர் கட்டப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ மதிரை கொண்ட கோப்பரகேசரிபன்மற்க்கு யாண்டு யகூ-ஆவது வாலிகண்டபுரத்து
2. திருவாலீஸ்வரத்து மஹாதேவற்க்கு தஞ்சாவூர் கண்டருள்கண்ட பெருந்தெருவில் சங்கரப்பாடியா
3. ன் சேயான்உள்வேலி நொந்தாவிளக்கினுக்கு (வைத்த) பொன் எழுகழைஞ்சு இப்பொன்
4. .........*

13 : 8

**இடம்** : கருவறைத் தென்சுவர் குமுதப்படை (தட்சணாமூர்த்தி கீழ்).

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், அதே ஆண்டு (கி.பி. 926).

**செய்தி** : வாலிகண்டபுரத்துச் சங்கரப்பாடியான் (எண்ணெய் வியாபாரி) நகைமுத்தான் என்பவர் திருவாலீஸ்வரத்து இறைவனுக்கு அரை விளக்கு எரிக்க 3½ கழஞ்சு பொன் வழங்கியுள்ளமை. கல்வெட்டு முற்றுப்பெறவில்லை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோபரகேசரிபன்மற்க்கு யாண்டு பத்தொன்பதாவது திருவாலீஸ்வரத்து மாதேவ(ர்க்கு)
2. வாலிகண்டபுரத்துச் சங்கரப்பாடியான் நகைமுத்தான் வைத்த அரை விளக்கால் பொன் முக்கழஞ்சரையா....

13 : 9

**இடம்** : அர்த்தமண்டப வடசுவர் குமுதப்படை.

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 31 (கி.பி. 938).

**செய்தி** : இது வன்னாட்டுப் பிரமதேயம் பிரதிசூரமங்கலத்துச் சபையார் அண்டாட்டு (அண்டாற்று) கூற்றத்து அலவாய் என்ற ஊரைச் சேர்ந்த கடம்பன்நாகன் (இம்மன்னனின் 3-ஆம் ஆண்டுக் கல்வெட்டிலும் குறிப்பிடப்படுகிறார்) என்பவரிடம் ஏதோ கொடைப் பொருள் பெற்றுக் கொண்டமைக்கு எழுதிய

கல்வெட்டாகும். கும்பகோணம் வட்டம் திரும்புறம்பியம் ஊர் மற்றும் அதைச் சுற்றியுள்ள ஊர்கள் அடங்கிய பகுதி அண்டாற்றுக் கூற்றம் என்ற நாட்டுப் பிரிவின் கீழ் இருந்தது. கல்வெட்டு முற்றுப் பெறவில்லை.

1. மதிரைகொண்ட கோப்பரகேசரி பன்மற்க்கு யாண்டு ௩யக-வ்து வன்னாட்டு ப்ரஹ்மதேயம் பிரதிசூரமங்கலத்து ஸபையோம்
2. கைய் எழுத்து அண்டாட்டுக் கூற்றத் தலவாய் கடம்பனாகன் கையால்*

**13 : 10**

**இடம்** : அர்த்தமண்டபத் தென்சுவர் முதற்பத்தி (1008 லிங்கம் உள்ள அறை)

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா. : 33 (கி.பி. 940)

**செய்தி** : விளாமுத்தூர் என்ற ஊர் 64 பிராமணர்களுக்கு விக்ரமசிங்கச் சதுர்வேதிமங்கலம் என்ற பெயரில் தேவதானப்பிரமதேயமாக மன்னரின் மகன் இராசாதித்தன் என்பவரால் வழங்கப்பட்டு ஆட்டுத்தெரி, கண்ணாலக்காணம் ஆகிய வரிகளிலிருந்தும் விலக்களிக்கப்பட்டது. இவ்வூரிலிருந்து கிடைக்கும் வரித்தொகை அறுகழஞ்சு மற்றும் பஞ்சவாரம்நெல் 60 கலம் ஆகியவை கொண்டு இக்கோயிலில் மூன்று விளக்குகள் ஏற்றவும் மூன்று திருவமிர்து படைக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது. விக்கிரமசிங்கன் என்பது முதலாம் பராந்தகனின் பட்டப் பெயராகலாம். கல்வெட்டின் தொடக்கப்பகுதி சுவர் வைத்து மறைக்கப்பட்டுள்ளது.

1. ..... மதிரை கொண்ட கோப்பரகே
2. ..... மற்க்கு யாண்டு ௩யங-வது
3. ..... ட்டு வாலிகண்டபுரத்து திருவா
4. ..... மஹாதேவற்க்கு இஞ்ஞாட்டு வி
5. ..... ட (இடனற்றாள் பூண்டி) பூண்டி உள்பட தேவ
6. ..... க ராசாதித்(த)* தேவர்க்கு கோவடி கோயில் விண்ண
7. ..... கழுமலமுடையானும் சிற்றம்பருடையானு
8. ..... வ்வூர் வளையிற் சுற்று உண்ணில மொழிவி
9. ..... றை ஆட்டுத்தெரிஉங் கண்ணாலகாண புதாக்கு(ட்டை)
10. ..... நீக்கிய் தேவதானஞ் செய்த விளாமுத்
11. ..... ல்ச் செம்மை அறுகழஞ்சு இதனால் பொ
12. ..... க் காலினாலும் கழஞ்சினுக்கு நெய் எண்ணை
13. ..... ண்ணமாக இப்பொன்னால் நெய் எண்ணை இர
14. ..... ந்த இவருது வ்விளாமுத்தூர் ஊபுட்ட இடரை
15. ..... ளக்கன் புறம்பி அட்டினத்தின் விண்ணப்

16. ..... ளெரிகின்ற விளக்கு மூன்றுந் திருவமிர்து இர
17. ... ஞ்சவார நெல்லு அறுபதின் கலமும் கொடுவ
18. ..... நால்வரு ப்ராஹ்மணர்க்குத் தேவதான
19. ம் விக்கிரமசிங்கச் சதுர்வேதிமங்கலம்

**13 : 11**

**இடம்** : கருவறை வடக்குச் சுவர் (பிரம்மா சிற்பத்தின் மேற்குப் பத்தி).

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 35 (கி.பி. 942).

**செய்தி** : வாலிகண்டபுரத்து அம்பலத்துக்கு நெய் எண்ணை ஊற்றி விளக்கு எரிப்பதற்கு எட்டு கழஞ்சுப் பொன் கொடை வழங்கியமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ யாண்டு ௩யரு- வாலிகண்ட
2. புரத்து அம்பலத்துக்கு வைத்த பொன் ஐங்
3. கழஞ்சு இதினால் பலிசை நெ(ய்)யெண்ணை நிச
4. தம் மாழாக்கு இப்பொன் கொண்டு
5 விளக்கு எரிப்பிப்பார் மாஹேஸ்வர இரக்ஷை.

**13 : 12**

**இடம்** : கருவறை வடக்குச் சுவர்.

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 38 (கி.பி. 945).

**செய்தி** : சோழ இளவரசன் இராஜாதித்தனின் பிரதிநிதியாக இப்பகுதியில் கண்ணாலக்காணம், புதாக்குட்டை முதலிய வரி வசூல் நிர்வாகத்தை கோதண்டமாயிலட்டி கன்மிவடுகன் கோமளக்கண்ணன் நாட்டார்க்கு வழங்கியமை. அதன்படி கண்ணாலக்கணம் கால் பொன் எனவும் புதாக்குட்டை நான்கு நாழி அரிசி எனவும் நிர்ணயிக்கப்பட்டமை. கல்வெட்டு சிதைந்துள்ளது.

1 ஸ்வஸ்திஸ்ரீ மதிரை
2. கொண்ட கோப்பரகேசரி
3. பன்மற்கு யாண்டு ௩யஅ-ஆ
4. வது பிள்ளையார் ராஜாதித்ததேவர்க்கா
5. ய்க் கண்ணாலகாணப் புதாக்குட்டை
6. ஆள்கின்ற கோதண்டமாயி
7. லட்டி கன்மிவடுகன் கோமளக்கண்ண
8. ன் வன்னாட்டு நாட்டார்க்கு ஒட்டி
9. இட்டுக் குடுத்த பரிசாவது
10. இந்நாட்டு ஒரு கண்ணாலத்தா

11. ற் காற்பொன்னும் புத்தரிசி
12. நாழி நாழியும் புதாக்குட்டை

13 : 13

**இடம்** : கருவறை மேற்குச் சுவர் (விஷ்ணு சிற்பம் வடக்குப் பத்தி).

**காலம்** : மேற்சுட்டிய அரசனது (கி.பி. 907 - 955).

**செய்தி** : வன்னாட்டுப் பகுதியை ஆட்சிசெய்த சிற்றரசர் வன்னாடுடையார் இலாடராயர் திருவாலீஸ்வரத்து மகாதேவர்க்குத் திருவமுது படைக்க ஆய்ப்பாடி ஊர் ஏரியின்கீழ் கால் நிலம் வழங்கியுள்ளமை. இன்று இவ்வூர் ஆலம்பாடி என்று மருவிய பெயரில் வாலிகண்டபுரத்திற்கு அருகில் உள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ வன்னாட்டு
2. திருவாலீஸ்வரத்து
3. மஹாதேவர்க்கு வன்னா
4. டுடையார் இலாடரா
5. யர் ஆய்ப்பாடி ஏரி
6. க்கீழ் திருவமுது ஒரு போ
7. தைக்கு நாராயத்தால் இரு
8. நாழி ஆக காட்டுவதாக வைத்த
9. நிலங்காலினால் திருவ
10. மிது ஒன்று பந்மாஹே
11. ஸ்வர ரக்ஷை.

13 : 14

**இடம்** : கருவறை மேற்கு சுவர் (விஷ்ணு சிற்பக் கோட்டத்தின் வடக்குப் பக்கச் சுவர்).

**காலம்** : மேற்சுட்டிய அரசனது (கி.பி. 907 -955).

**செய்தி** : வன்னாட்டு சிற்றரசர் இலாடராயரிடம் மிலாட்டு மன்னர் கயிறூர் பெருமானார் என்பவர் விலை கொடுத்து நிலம் வாங்கி கோயிலுக்கு அமுதுபடைக்கக் கொடுத்தமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ ஆய்ப்பாடி ஏரிக்கீழ் வன்னாடு
2. டைய இலாடராயர்க்கு மிலாடுடையார் கயிறூர்
3. பெருமானார் விலைக் குடுத்து கொண்ட நிலங்
4. கால் இருபோதைக்கு நாராயத்தால் இரு நாழி
5. ......................

13 : 15

**இடம்** : கருவறை வடக்குச்சுவர் (பிரம்மா சிற்பக்கோட்டத்துக்கு மேற்குப் பக்கச் சுவர்).

**காலம்** : மேற்சுட்டிய அரசனது (கி.பி. 907 - 955).

**செய்தி** : அக்கோபுகழறையர் இறைவனுக்குத் திருவமுது படைக்க நிலம் வழங்கியுள்ளார்.

1. ஸ்வஸ்திஸ்ரீ வன்னாடுடை அக்கோபுக
2. ழறையர்.....த்து ஒரு
3. போதைக்கு திருவமுது...த்தால்
4. இருநாழி..... ஆக திருவமுது ஒன்றுக்கும்
5. ஆக திருவமிது.......ச
6. ந்திராதித்தவல் அட்டக் கடவது இது
7. பன்மாஹேஸ்வர ரக்ஷை.

13 : 16

**இடம்** : அர்த்தமண்டப வடசுவர் மூன்றாம்பத்திக் கூரை.

**காலம்** : இராசகேசரிவர்மன் (கண்டராதித்தன்), யா : 12 (கி.பி. 952).

**செய்தி** : அகங்கன் மலை இராசாதித்தன் ஆன செம்பியன் மிலாடுடை யான் என்பவர் இக்கோயிலுக்கு ஒரு நந்தாவிளக்கு எரிக்க 7½ கழஞ்சுப் பொன் வழங்கியுள்ளார். இப்பொன்னைப் பெற்றுக் கொண்ட வாலிகண்டபுரத்துச் சங்கரப்பாடி நகரத்தார் அதற்கு வட்டியாக (பலிசை) தினமும் உழக்கு எண்ணை வழங்கியுள்ளனர். மிலாடு என்பது இன்றைய திருக்கோயிலூர் வட்டத்துப் பகுதியாகும். அப்பகுதியை ஆட்சிசெய்த சிற்றரசர் மிலாடுடையான் ஆவார். இராசாதித்தன் என்பவர் பரகேசரிவர்மன் என்ற பட்டம் கொண்ட முதலாம் பராந்தகசோழரின் மகனாவார். இப்பெயரில் இச்சிற்றரசர் குறிப்பிடப்படுகிறார். ஆதலால் இராசகேசரிவர்மன் என்ற பெயரில் தொடங்கும் இக்கல்வெட்டு பராந்தகனுக்குப்பின் மன்னரான இராசகேசரிவர்மன் கண்டராதித்த சோழருடையது எனக் கொள்ளலாம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராசகேசரிபர்ம்மற்க்கி யாண்டு உ-ஆவது
2. வன்னாட்டு வாலிகண்டபுரத்து திருவாலீஸ்வ
3. ரத்து மஹாதேவற்க்கு அகங்கன் மலை இரா(சா)
4. தித்தன் ஆந செம்பியன் மிலாடுடையான் (வை)வத்த
5. க-நொன்தாவிளக்கு க-ன்றுக்கு பொன் எழுகழஞ்ச
6. ரை இதின் பலிசை நிசதி உழக்கு நாராயத்தால் அட்ட
7. க் கடவார் வாலிகண்டபுரத்து சங்கரப்பாடி நகரத்தார்.

**13 : 17**

**இடம்** : கருவறை மேற்கு சுவர் கூரைப்பகுதி.

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 2 (கி.பி. 954).

**செய்தி** : அகலங்கன் மலை இராசாதித்தன் ஆன செம்பியன் மிலாடுடையான் என்பவர் இக்கோயிலில் ஒரு விளக்கு எரிக்க 7½ கழஞ்சு பொன்னை வாலிகண்டபுரத்துச் சங்கரப்பாடி நகரத்தாரிடம் ஒப்படைத்து உள்ளமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராஜகேசரிபன்மர்க்கு யாண்டு உ-வது
2. வன்நாட்டு வாலிகண்டபுரத்து திருவாலீஸ்வரத்து மஹாதேவ
3. ர்க்கு அகலங்கன் மலை இரா(சா)தித்தன்ஆந செம்பியன் மிலாடுடையான் வை
4. த்த நொந்தாவிளக்கு ஒன்றுக்கு பொன் எழுகழஞ்சரைக்குப் பலிசைய்
5. க்கு நாராயத்தால் எண்ணை உழக்கு அட்டக்கடவார்
6. வாலிகண்ட
7. புரத்து சங்
8. கரப்பாடி நகரத்தார்.

**13 : 18**

**இடம்** : கருவறை மேற்குச்சுவர் குமுதப்படை (விஷ்ணு சிற்பத்தின் கீழ் பகுதி).

காலம் : மேற்சுட்டிய மன்னன், யா : 5

செய்தி : இக்கல்வெட்டில் மன்னன் பெயர் இல்லை நடுப்பகுதியில் கல்வெட்டு சிதைந்துள்ளது. திணையான் கணதேவன் நடுப்பையன் என்பவர் கொடை வழங்கியமை. கல்வெட்டு முற்றுப் பெறவில்லை.

1. யாண்டு ஐ(ஞ்) சாவது ..... ய்த்திணையான் கணதேவன்
2 நடுப்பையேன் வை.... ரவூர் கழஞ்சு இது மூன்று....
3. ந்தியும் ஆராதிக்கின்ற

**13 : 19**

**இடம்** : கருவறை மேற்கு சுவர் (விஷ்ணு கோட்டத்தின் தென்புறப் பத்தி).

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 5 (கி.பி. 955).

**செய்தி** : வன்னாட்டு இளம்பலூரைச் சேர்ந்த புகழறைபூமி சுந்தரன் என்பவர் இக்கோயிலில் ஒரு நந்தா விளக்கு எரிக்க 90 ஆடுகள் கொடை அளித்தமை.

1. ஸ்வ
2. ஸ்திஸ்ரீ
3. கோவி
4. ராசகே
5. சரிப
6. ந்மற்க்கு யாண்டு ச-ஆவதினெதிராமாண்டு வன்னாட்டு
7. த் திருவாலீஸ்வரத்து மஹாதேவர்க்கு இஞ்ஞாட்டு
8. இளம்பல்லூருடையான் புகழறைபூமிசுந்தரன் வைத்த நொந்தா விள
9. க்கு ஒன்றினுக்கு வைய்த்த ச ஆடு தொண்ணூறு இவ்வாட்டால் (நெய் எ) ண்ணையா
10. ல் நாராயத்தால் நிசதம் உழக்கு [சாவாமூவாப் பேராடு என்பதைக் குறிக்க ச என்ற எழுத்து மட்டும் எழுதப்பட்டுள்ளது]

13 : 20

**இடம்** : அர்த்தமண்டப வடசுவர் ஜகதிப்படை இரண்டாம் பத்தி கீழ்ப்பகுதி.

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 6 (கி.பி. 956).

**செய்தி** : வன்னாடு பகுதியை ஆண்ட சிற்றரசர் அக்கோர்புகழறையர் இக்கோயிலில் விளக்கு எரிக்க ஏழுகழஞ்சு பொன் கொடுத்துள்ளார். இதனைப் பெற்றுக்கொண்டு இக்கோயில் பட்டுடையார்கள் (அலுவலர்) மூவர் தினமும் உழக்கு நெய் வழங்கிட ஒப்புக் கொண்டனர். இவ்விளக்கு வீரசோழப் பல்லவரையன் இக்கோயில் நிருவாகியாக இருந்தபோது வைக்கப்பட்டது. இச்சிற்றரசர் முதலாம் பராந்தகனுக்குப் பின் வந்த இராசகேசரி கண்டராதித்தனுடையது எனக் கொள்ளலாம். கல்வெட்டில் சிற்றரசர் வைத்தது பட்டம் என உள்ளது. இறுதிப்பகுதியில் விளக்கு என எழுதப் பெற்றுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராசகேசரிபன்மக்கு யாண்டு ஆறாவது வன்னாட்டு வாலிகண்டபுர
2. த்து திருவாலீஸ்வரத்தில் பட்டுடையார்கள் செருவிடை பரமேஸ்வரனும் புசங்க
3. ன் வடுகன் மறவனும் மாதேவபட்டனும் இம்மூவரும் வன்நாட்டு உடையார் அக்கோபுகழறையர் வை
4. த்த பட்டம் எழுகழஞ்சும் இபொன்நால் நிசத உழக்கு ஒன்றால். (நெய்?) அட்டக்கடவோ மூவோம்//வீரசோழபல்ல
5. வரையன் ஆராஞ்சு வைத்
6. த விளக்கு.

13 : 21

**இடம்** : கருவறை மேற்குச்சுவர் ஜகதிப்படை (விஷ்ணு சிற்பத்தின் கீழ்).

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், அதே ஆண்டு.

**செய்தி** : வன்னாடுடையாரின் மனைவி திருநிலைநங்கை என்பவர் அரை விளக்கு வைக்க 3½ கழஞ்சு பொன் வழங்கியுள்ளமை. மேலுள்ள கல்வெட்டில் சுட்டப்படும் அக்கோபுகழறையரின் மனைவி எனலாம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிரா(ச)கேசரிபன்மக்கு யாண்டு வன்னாடுடையார் தேவியார் திருநிலை நங்கை
2. வைத்த அரைய் விளக்கினால் வைத்த பொன்முக்கழஞ்சரையால் நெய் எண்ணை நிசதி ஆழ(ா)க்கு வீர
3. (சோ) ழப(ல்) லவரை(யர் ஆரா(ஞ்)சு வெட்டிவித்த விளக்கு.

13 : 22

**இடம்** : மேற்சுட்டியப்படி.

**காலம்** : இராசகேசரிவர்மன் அறிஞ்சய சோழன், யா : 2 (கி.பி. 955).

**செய்தி** : பராந்தகன் அறிஞ்சய சோழரின் இரண்டாம் ஆண்டில் முந்தைய கொடைகளைப் பற்றி ஆய்ந்து தற்போது கல்லில் அவைபற்றி வெட்டப்பட்டதாகத் தெரிகிறது. அவ்வகையில் 7 நிலை விளக்கு, ஆறு காளம், ஒரு செப்புக்குடம், ஒரு கலசப்பானை, இரண்டு கண்ணாடி, 2 தளிகை, 2 மத்தளி, ஒரு சர்வம், ஒரு சட்டி, ஒரு கறிக்கால், ஒரு வட்டிக்கால், ஒரு சட்டுவம், ஒரு தூபமணி மற்றும் 4 விளிசங்கு ஆகிய பொருட்கள் கணக்கெடுக்கப்பட்டு கல்லில் வெட்டப்பட்டன. மன்னனின் பட்டப்பெயர் பரகேசரி என இருக்க வேண்டும். ஆனால் இராஜகேசரி என்று எழுதப்பட்டுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராஜகேசரி பராந்தகன் அறிஞ்சி பந்மற்க்கு யாண்டு உ-ஆவது திருவாலீஸ்வரத்து மஹாதேவர்க்கு இவாண்டிந்கீழ் முந்பு கல்லில் (வீரசோழபல்லவ)ரயர் ஆராஞ்சு இடுவித்த நிலைவிளக்கு ஏழு
2. காளம் ௬-செப்புக் குடம்-க கலசப்பானை-க காளாஞ்சி -க கண்ணாடி - உ பலித்தாலம் -உ தளிகை-உ மத்தளி-க-சருவம்-க சட்டி-க கறிக்கால்-க வட்டிக் கால்-க சட்டுவம்-க தூபமணி க-விளிசங்கு-4 இது பந்மாஹே
3. ஸ்வர ரக்ஷை.

13 : 23

**இடம்** : அர்த்தமண்டப வடசுவர் இரண்டாம் பத்தி கூரை.

**காலம்** : இராசகேசரிவர்மன் சுந்தரசோழன், யா : 11 (கி.பி. 968)

**செய்தி** : வன்னாட்டுப் பகுதியின் சிற்றரசராக மறவன் தூங்கானையான பராந்தகவன்னாடுடையான் என்பவர் இருந்தார். வன்னாடு, வள்ளுவப்பாடி நாடு ஆகிய நாடுகளில் வரிச்சுமையைக் குறைத்து வரி அளவை கால் கழஞ்சு பொன்னாக வசூலிக்க ஆணையிட்டமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோஇராசகேசரிபன்மற்க்கு யா
2. ண்டு யக-ஆவது மறவன் தூங்கானை
3. ஆன பராந்தக வன்னாடுடையானேன் வன்னாடும்
4. வள்ளுவப்பாடியும் பரி(வரி) கொண்டு கலகழிக்கு
5. ப் போச்சென்று யங்கி (னாரணன்னும் கொள்) புகழறைய்
6. நமக்குச் சொல்ல இரண்டு நாடு அடியுறை (ஆட்டிறை) பொன் கழஞ்சும்
7. கால்கால்ச் செம்மையாக கொழ்வேன்
8. சந்திராதித்தவல் நிற்பதாக கொழ்வேன்
9. ன் அறமறவற்க்க.

13 : 24

**இடம்** : கருவறைத் தென்சுவர் (தட்சணாமூர்த்தி கோட்டத்தின் இருபக்கச் சுவர்கள்).

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், அதே ஆண்டு.

**செய்தி** : பிராந்தக வன்னாடுடையாரின் குல தெய்வமான பகவதியார் என்ற இறைவிக்கு இவரின் மனைவி ஒரு நந்தாவிளக்கு எரிக்க ஆய்ப்பாடி ஏரியின்கீழ் நிலம் வழங்கியுள்ளார். கல்வெட்டு சிதைந்துள்ளது. பகவதி என்னும் பெண் தெய்வம் இன்று வாலிகண்டபுரம் அருகில் உள்ள சிறுவாச்சூர் மதுர காளியம்மனாக இருக்கக்கூடும் எனக் கருதலாம்.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிராசகேசரிபந்ம(ற்க்குயாண்டு ய)க-ஆவது பிராந்தக
2. வன் நாடுடையார் குலதே[ய்]வதை பகவதியார்
3. க்கு பிராந்தக வன்னாடுடையார் தேவியார் ச..........
4. க்குத்து எரிய வைத்த நொந்தா விளக்கு க-ன்றுக்கு வை..........
5. ..........
6. .......... நிசதி உழக்கு வன்னாடுடை ..........
7. .......... காணி நிலம் ஆய்ப்பாடி ஏரியில்
8. .......... வடக்கிற்றையு மித
9. .......... நிலங்
10. ..........

**13 : 25**

**இடம்** : கருவறை வடசுவர் (பிரம்மா சிற்பத்தின் மேற்கு பக்கச் சுவர்).

**காலம்** : மேற்சுட்டியபடி.

**செய்தி** : வன்னாடுடையாரிடம் ஆனைப்பெண்டிராக (யானையைப் பராமரிக்கும் அலுவலர்) பணிசெய்த நக்கன் மாதேவி கோலநாகன் என்பவர்க்கு இக்கோயிலில் அரைவிளக்கு ஏற்ற மூன்றேமுக்கால் கழஞ்சுப் பொன் வழங்கியதைப் பெற்றுக்கொண்ட மணிக் கிராமத்தார் நாள்தோறும் ஆழாக்கு நெய் வழங்க ஒப்புக் கொண்டமை.

1. கோவிராசகேசரிபன்மக்கு யாண்டு
2. யக-வது வன்னாட்டு வாலிகண்டபுரத்து
3. திருவாலீஸ்வரத்து மஹாதேவர்க்கு வன்னாடுடையா
4. ர் ஆனைபெண்டிர் நக்கன் மாதேவி கோலநாகன் ஐ
5. க்கு வைத்த அரைவிளக்கொன்றினால் பொன்(ன்) முக்கழஞ்சே மு(க்)கா
6. ல் இப்பொன்னால் பலிசை நிசத ஆழாக்கு நாராயத்தால்
7. நிசத் ஆழாக்கு அட்டக் கடவர் மணிக்கிராமத்தார்.

**13 : 26**

**இடம்** : அர்த்தமண்டப வடசுவர் முதற்பத்திக் கூரை.

**காலம்** : மேற்சுட்டியபடி.

**செய்தி** : திருகோவலூரைச் சேர்ந்த அரும்பாக்கிழான் சாத்தன் இக்கோயிலில் அரைவிளக்கு எரிக்க 3½ கழஞ்சு பொன் வழங்கியதை வாலிகண்டபுரத்துச் சங்கரப்பாடி நகரத்தார் பெற்றுக் கொண்டு தினமும் ஆழாக்கு நெய் வழங்கிட ஒப்புக் கொண்டமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோவிஇராசகேசரிபன்மற்க்கு யா
2. ண்டு 14-ஆவது திருவாலீஸ்வரத்து மஹாதேவர்க்கு
3. திருக்கோவல்லூர் அரும்பாற்கிழான் சாத்தன் பரம குட்டன்
4. வைத்த அரைவிளக்கால் பொன் முக்கழஞ்சரையால்
5. நிசதம் நாரா(ய) த்தால் ஆழாக்கு நெய் எண்ணை அட்டு
6. வதாகவும் வாலிகண்டபுரத்து சங்கரபாடி
7. நகர(த்)தார் வசம் இது சந்திராதித்தவல் பந்மாயேஸ்வர ரக்ஷை.

13 : 27

**இடம்** : கருவறைத் தென் சுவர் (தட்சணாமூர்த்தி கோட்டத்தின் கிழக்குச் சுவர் கூரை).

**காலம்** : பரகேசரிவர்மன் உத்தமசோழன், யா : 9 (கி.பி. 979).

**செய்தி** : இக்கோயிலுக்கு ஸ்ரீமாபலிவாணராய பீமீஸ்வரதேவன் என்பவர் ஒரு நந்தாவிளக்கு எரிய வைக்க 7½ கழஞ்சு பொன்னை வழங்கியுள்ளார். இப்பொன்னைப் பெற்றுக்கொண்டு மேலை நகரத்தார் நாள்தோறும் உழக்கு நெய்வழங்க ஒப்புக் கொண்டனர். வாணராயர் சோழச் சிற்றரசராக விளங்கியவர் எனத் தெரிகிறது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திவோபாண ப்ருதிவேந விஜயாதித்ய வர்ம்மணஹ ஆஸந்த்ரகார காதி விதத்தோ வாலீஸ்வராலையே
2. கோப்பரகேசரிபன்மற்கி யாண்டு கூ-ஆவது வன்னாட்டு வாலிகண்டபுரத்து திருவாலீஸ்வரத்துஆ
3. ழ்வார்க்கு ஸ்ரீமாபலிவாணராய பீமீஸ்வரதேவன் வைத்த நொன்தா விளக்கு க-அது எரிய(வைத்த)நி
4. லை விளக்கொன்றினுக்கு பொன் எழுகழஞ்சரை இப்பொன்னால் பலி
5. சை நிசதி உழக்கு நாராயத்தால் மேலைநகரத்தார் கொண்
6. டு அட்டக் கடவர் இது பந்மா
7. ஹேஸ்வர ரக்ஷை.

13 : 28

**இடம்** : கருவறைத் தென் சுவர் (தட்சணாமூர்த்தி கோட்டத்தின் கிழக்குச் சுவர் கூரை).

காலம் : மேற்சுட்டியபடி.

செய்தி : கொடையாளரின் பெயர் சிதைந்துள்ளது அவர் இக்கோயிலில் ஒரு விளக்கு எரிக்க 7½ கழஞ்சுப் பொன் வழங்கியதை நகரத்தார் பெற்றுக் கொண்டு வட்டியாக நாள்தோறும் உழக்கு எண்ணை வழங்கியுள்ளமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோப்பரகேசரிபந்மற்க்கி யாண்டு கூ-ஆவது வன்(நாட்)டு வாலி
2 கண்டபுரத்து திருவாலீஸ்வரத்து மஹாதேவர்க்கு வாலிகண்ட (புரத்து) இருக்கு
3 பி(ளை)யன் மத்தி வைத்த முழு விளக்காற் பொன் எழுகழஞ்சரை இப்பொன் நகரத்
4. தார் கொண்டு பலிசை நிசத நெய் எண்(ணை) நாராய
5. த்தால் உழக்கு பந்மாஹேஸ்வர ரக்ஷை.

13 : 29

**இடம்** : அம்மன் சன்னதி வடக்கு, மேற்கு, கிழக்குச் சுவர் பீடத்து (விருத்தகுமுதம்) துண்டுக் கற்கள்.

**காலம்** : முதலாம் இராஜராஜன், யா : 6 (கி.பி. 991).

**செய்தி** : பிரிதிசூரமங்கலத்து (இன்றைய பிரம்மதேசம்) ஊரில் உள்ள திருச்சிலாக்குன்றத்து ஆழ்வார்க்கு காளம், சேகண்டி, ஆகிய இசைக் கருவிகள் இசைப்பவர்களுக்கு வழங்கிய கொடை குறித்தது. இக்கல்வெட்டு பிரம்மதேசம் ஊரில் இருந்த சிவன்கோயிலைச் சேர்ந்ததாகும். ஆனால் அக்கோயில் இடிக்கப்பட்டு அதன் கற்கள் வாலிகண்டபுரம் கோயிலுக்கு கொண்டுவரப்பட்டு அம்மன்சன்னதி கோயில் கட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

1. ஸ்வஸ்திஸ்ரீ கோஇராஜகேசரிபன்மர் ராஜராஜ......
2. க்குச் செல்ல நின்ற யாண்டு 6-வது......
3. ச் சுரமங்கலத்துத் திருச்சிலாக்குன்றத்து ஆள்வார்க்கு
4. காளம் இரண்டுக்கும் சேகண்டி ஒன்றுக்கு முக்கு-

13 : 30

**இடம்** : கருவறை மேற்குச் சுவர் (விஷ்ணு சிற்பக் கோட்டத்தின் தென்புறப் பத்தி).

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 12 (கி.பி. 997).

**செய்தி** : வன்னாடு ஜீவிதமுடைய ஐயனார் என்பவருடைய மகன் நாரண தேவன் என்பவர் குதிரையிலிருந்து விழுந்தோ அல்லது குதிரைமுட்டியோ இறந்தார். இவருக்காக இவரின் பணியாளர் வெண்காடனார் என்பவர் இக்கோயிலில் ஒரு விளக்கு ஏற்ற 90 ஆடுகள் கொடுத்துள்ளமை.

1. ஸ்வஸ்திஸ்ரீ
2. காந்தளூர் சா
3. லை கலமறுத்த
4. கோராஜராஜகேசரிபந்மற்கு ' யாண்டு யஉ-ஆவது வன்னாட்டு வாலிகண்டபுரத்து திரு
5. வாலீஸ்வரத்து மஹாதேவற்க்கு இன்னாடு ஜீவிதமுடைய்
6. யனார் மகன் கணயான் னாரணதேவன் குதிரையில்லித்து சரிய இவரடியான் வெண்காடன்னார்
7. இவனைச் சாத்தி வைத்த நொந்தா விளக்கு ஒன்று இதுக்கு வைத்த சாவாமூவாப் பேராடு தொண்ணூறு
8. இவ்வூர் ஸ்ரீகோயிலுடையார் வசம் இது பந்மாஹேஸ்வ (ர ரக்ஷை).

13 : 31

**இடம்** : கருவறைத் தென்சுவர் கூரை.

**காலம்** : மேற்சுட்டிய மன்னன், யா : 16 (கி.பி. 1001).

**செய்தி** : பஞ்சவன் மாராயன் என்ற அதிகாரி வன்னாடு, வள்ளுவப்பாடி நாடு ஆகிய பகுதிகளுக்குக் கண்ணாலகாணம் என்ற வரியிலிருந்து விலக்கு அளித்தார். மேலும் பிதுகுட்டை (புதாகுட்டை) என்ற வரியால் கிடைக்கும் வருமானத்தைக் கொண்டு (கலம் நெல்லுக்கு 3 நாழி நெல்) அவ்வூர் ஏரியை ஆழப்படுத்தச் (கல்லுதல்) செலவிடும்படிச் செய்தார். இவ்வரி தவிர்ப்பை நாட்டாரின் இசைவுடன் செய்தார் என்றும் அறிகிறோம். பிதுக்குட்டை என்பது வரியின் பெயர். இது பல்லவர், சோழர் கல்வெட்டுக்களில் பிடநாழி, பிதாநாழி, புதாநாழி என்ற பெயர்களில் குறிப்பிடப்பெற்றுள்ளது.

1. ஸ்வஸ்திஸ்ரீ திருமகள்போலப் பெருநிலச் செல்வியுந் தநக்கே யுரிமை பூண்டமைமனக்கொளக் காந்தளூர்ச் சாலை கலமறுத்தருளி வேங்கை நாடு
2. ங் கங்கபாடி தடியபாடி நுளம்பநாடுயுங் குடமலைநாடுங் கொல்லமுங் கலிங்கமுந் திண்டிறல் வென்றித் தண்டாற் கொண்ட தன்னெ
3. ழில் வளரூழி எல்லா யாண்டுந் தொழுதக விளங்கும் யாண்டேய் செழியரைத் தேசுகொள் கோராஜராஜகேசரி பர்ம்மற்க்கு யாண்டு 16–
4. ஆவது கூத்தனங்கிழான் பஞ்சவன் மாராயனேன் வன்னாடும் வள்ளுவப்பாடியும் யாண்டு பதினாறாவது முதல் கண்ணாலகா
5. ணன்(காணம்) சந்திராதித்தவல் தெவிர்ந்து குடுத்தேன் வன்னாடும் வள்ளுவப்பாடியும் பிதுகுட்டையுங் கலத்துவாய் முந்நா
6. ழி நெல்லுந் தங்களூர் ஏரிகரைக்கு............ கடவர்களாகவும் இப்பரிசு இவ்வாண்டு (மிதிராட்டி)
7. ............ நாட்டாரி)சைவினாலன்றாடு .......... இந்த பொன்றண்டமுங் கொ
8. ண்டு ஏரி கல்லுவதாகவுஞ் செய்துகுடுத்தேன்
9. பஞ்சவன் மாராயனேன் இவர் கர்ம்மிச் சோழநாட்டு
10. தென்கரைப் பனையூர் நாட்டு வடசேரியுடையா
11. (ன்குடியன்) நாராயணன் எழுத்து இத்தன்மம்
12. .............. (சில இடங்களில் கல்வெட்டு சிதைந்துள்ளது).

13 : 32

**இடம்** : அலங்கார மண்டபம்-பீடப்பகுதியில் வைத்துக் கட்டப்பட்டுள்ள துண்டுக் கற்கள்.

காலம் : மேற்சுட்டிய மன்னன், யா : 28 (கி.பி. 1013).

**செய்தி :** இக்கல்வெட்டு பல துண்டுகளாக உள்ளது. இதில் இராசராசன், இராசேந்திரன் ஆகிய இருவரின் கல்வெட்டுகளும் கலந்து காணப்படுகின்றன. வாலிகண்டபுரத்துக்கு கேரளாந்தகபுரம் எனும் பெயர் இருந்தது என்பதை இக்கல்வெட்டு கூறுகின்றது. கேரளாந்தகன் என்பது முதலாம் இராசராசனின் பட்டப் பெயர்களில் ஒன்றாகும். வாலிகண்டபுரத்தில் அருமொழிதேவ ஜீனாலயம் என்ற சமணக்கோயிலை ஜெயங்கொண்ட சோழப்பேரரையர் என்பவர் கட்டியுள்ளார். அருமொழி என்பது அம்மன்னரின் இயற்பெயராகும். இக்கோயிலில் தஞ்சாவூர் உள்ளாலைப் பெரிய அங்காடியைச் சேர்ந்த மோடன் வெண்காடன் என்பவர் ஒரு விளக்கு வைத்துள்ளார். அவ்விளக்கை வாலிகண்டபுரத்துச் சங்கரப்பாடியார் பராமரிக்க ஒப்புக் கொண்டனர். மேலும் இவ்வூர் கரிகாலகன்ன வளநாடு என்ற பிரிவின் கீழ் இருந்தது எனவும் இக்கல்வெட்டால் அறிகிறோம். இராஜராஜன் காலத்தில் சோழ நாட்டில் 9 வளநாடுகள் தான் இருந்தது என்று இதுவரை அறியப்பட்டுள்ளது. ஆனால் இக்கல்வெட்டால் 10-வது வளநாட்டுப் பெயராக கரிகாலகன்ன வளநாடு பிரிவின் பெயர் தெரிய வருகிறது.

(துண்டு - 1)

1. திருமகள் போலப் பெருநிலப் செல்வியு
2. ஸ்ரீ ராஜராஜ கேசரிபர்மரான ஸ்ரீராஜ

(துண்டு - 2)

3. ஜூர்ச் சாலை கலமறுத்தருளி வே
4. வர்க்கு யாண்டு உயஅ-வது வடகரை

(துண்டு - 3)

5. ங்கை நாடுங் க(ங்) கபாடியும் நுளம்ப பாடியுந் தடியை
6. க் கரிகாலகந்ந வளநாட்டு வன்நாட்டு வாலிகண்ட

(துண்டு - 4)

7. பாடியுங் குடமலை நாடுங் கொல்லமுங்க லிங்கமும் எண்டி
8. டபுரமான கேரளாந்தகபுரத்துத் தஞ்சாவூருள்ளாலைப் பெரிய

(துண்டு - 5)

9. சைபுகழ்த்த ஈழமண்டலமும் இரட்டபா
10. ங்காடி மோடன் வெண்காட ..........

(துண்டு - 6)

11. இலக்கமும் திண்டிறல் வெந்றி தண்டால் கொண்டு தன்னெழில் வளர் ஊழியு எல்லாயாண்டுந் தொழுதகை
12. ண்ட சோழப் பேரையன் எடுப்பித்த அ

# 46. தமிழகக் காசுகள்
## (அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள்)

ஆறுமுகசீதாராமன், தஞ்சை.

பல்லவர் காசுகள் :

காசு - 1 :



காசின் முன்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி நிற்கும் காளை உள்ளது. பின்பக்கத்தில் காசின் நடுவில் செங்குத்தான கோப்பையின் மேல் மாலை போடப்பட்டுள்ளது. இந்தக் காசு எந்தப் பல்லவ மன்னனால் வெளியிடப்பட்டது என்பதை ஆய்வு செய்ய வேண்டும். காலம் : கி.பி. 7 ஆம் நூற்றாண்டு. எடை : 1.9 கிராம், கிடைத்த இடம் : கும்பகோணம், உலோகம் : கலப்பு உலோகம்.

காசு - 2 :



காசின் முன்பக்கத்தில் இடது பக்கம் நோக்கி நிற்கும் காளை உள்ளது. பின்பக்கத்தில் வட்டத்திற்குள் இடதுபக்கம் தலையுடனும், வலது பக்கம் வாலுடனும் ஒரு நாகம் ஒன்று படமெடுத்துள்ளது. இந்த காசின் மூலம் பல்லவர் காலத்தில் நாக வழிபாட்டின் சிறப்பை அறியலாம். எடை : 500 மி.கிராம், கிடைத்த இடம் : கும்பகோணம், உலோகம் : கலப்பு உலோகம்.

**சோழர் காசு :**



காசின் முன்பக்கத்தில் நிற்கும் மனித உருவமும், (தலைப்பகுதி விளிம்பிற்கு வெளியே) இடது பக்கத்தில் ஒரு விளக்கும் உள்ளன. வலது பக்கத்தில் (ரா)ஜந்த(ர) என்று கிரந்தமும் தமிழும் கலந்து பொறிக்கப்பட்டுள்ளது. 'ந்த' கூட்டெழுத்தில் உள்ளது. பின்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி நிற்கும் பன்றி ஒன்று உள்ளது. பன்றியின் மேல் சூரியன், சந்திரன் உருவங்கள் உள்ளன. பின்பக்கத்தில் உள்ள பன்றி மேலைச்சாளுக்கிய வெற்றியை நினைவுகூரும் முறையில் ராஜேந்திர சோழனால் வெளியிடப்பட்டிருக்கலாம். எடை : 2.8 கிராம், கிடைத்த இடம் : கரூர், உலோகம் : செம்பு.

**மதுரை நாயக்கர் காசு :**



விஸ்வநாதன் (கி.பி. 1529-64). காசின் முன்பக்கத்தில் நிற்கும் மனித உருவம் காணப்படுகிறது. பின்பக்கத்தில் இடது பக்கம் செங்குத்தாக சூலம் ஒன்றும், சூலத்திற்குப் பக்கத்தில் நிற்கும் காளையின்மேல் **'விச்வநாத'** என்று மன்னரின் பெயர் தெலுங்கிலும் தமிழிலும் பொறிக்கப்பட்டுள்ளது. 'ச' என்ற எழுத்து தமிழில் உள்ளது. இந்த காசில் உள்ள காளை சூலம் மதுரை நாயக்கர்களின் இலச்சினையாகும். எடை : 3.4 கிராம், கிடைத்த இடம் : மதுரை, உலோகம் : செம்பு.

**தஞ்சை நாயக்கர் காசுகள் :**

**காசு - 1 :**



மன்னர் ரகுநாத நாயக்கர் (கி.பி. 1600-45). காசின் முன்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி நிற்கும் மயிலின் மேல் சூரியன், சந்திரன் உருவங்கள் உள்ளன. பின்பக்கத்தில் **'ஸ்ரீரகுணாத'** என்று மூன்று வரிகளில் தெலுங்கு எழுத்துகளில் பொறிக்கப்பட்டுள்ளது. எடை : 2.7 கிராம், கிடைத்த இடம் : கும்பகோணம், உலோகம் : செம்பு.

**காசு - 2 :**



மன்னர் விஜயராகவ நாயக்கர் (கி.பி. 1631-1673), காசின் முன்பக்கத்தில் வலது பக்கம் நோக்கி பாயும் குதிரையின் மேல் மன்னரும், அரசியும் உள்ளனர். பின்பக்கத்தில் அமர்ந்த நிலையில் மன்னரும், அரசியும் உள்ளனர். இந்த காசில் உள்ள உருவங்கள் விஜயராகவ நாயக்கர் மற்றும் அவரது மனைவியின் உருவங்களாக இருக்கலாம். எடை : 1.1 கிராம், கிடைத்த இடம் : தஞ்சாவூர், உலோகம் : செம்பு.

# 47. பல்லவர்கால விஷ்ணு செப்புத்திருமேனி

செ. கோவிந்தராஜ், புதுக்கோட்டை.

செப்புப் படிமக்கலையில் உன்னதகாலம் என்று சோழர் காலத்தைக் குறிப்பிடுவர். சோழருக்கு முன்பு பல்லவர்கள் காலத்தில் கற்சிற்பங்களே அதிகம் பேசப்படும் கலைப்பொருட்களாய் இருந்துவந்துள்ளன. ஆங்காங்கே கிடைத்த சில செப்புத் திருமேனிகள் கலைத்தன்மையால் சோழர் காலத்திற்கு முற்பட்டதாய் இருக்க அவற்றை பல்லவர் காலத்தைச் சேர்ந்தவை என அறிஞர்கள் இனங் கண்டனர். எனவே பொதுவாகப் பல்லவர் காலத்தைச் சேர்ந்த செப்புத்திருமேனிகள் அரிதாகவே காணப்படுகின்றன. தஞ்சைக் கலைக்கூடத்தில் உள்ள செப்புத்திருமேனிகளில், பல்லவர் காலத்தைச் சேர்ந்தவைகளாய் கருதப்படக்கூடிய இரண்டு விஷ்ணு செப்புத்திருமேனிகள் உள்ளன. அவற்றின் காலத்தை கி.பி. 9ஆம் நூற்றாண்டு என கணித்து உள்ளனர். இதே கலைத்தன்மையைக் கொண்ட விஷ்ணு செப்புத்திருமேனி ஒன்று அண்மையில் திருச்சி அருங்காட்சியகத்தில் புதைபொருளாய் பெறப் பட்டுள்ளது. திருச்சி நீதிமன்றம் வாயிலாக ஒதுக்கீடு செய்து பெறப்பட்டுள்ள இதுவும் தஞ்சைக் கலைக்கூடத்தில் உள்ள செப்புத்திருமேனி கிடைத்த ஊரான பெருந்தோட்டத்தைச் சேர்ந்ததாய் இருக்கலாம்.

இந்த செப்புத்திருமேனி உயரம் 25 செ.மீ. ஆகும். நான்கு கைகளுடன் நேராய் நின்றவாறு இத்திருமேனி காணப்படுகிறது. பின் வலது இடது கைகளில் முறையே சக்கரம் மற்றும் சங்கு காணப்படுகின்றன. அவற்றை கர்த்தரி முத்திரையில் பிடிக்காமல் இயல்பாய் பிடித்திருப்பது இப்படிமத்தின் பழமையை உறுதி செய்ய உதவுகிறது. இச்சின்னங்கள் இரண்டும் நேராய் இல்லாமல் முகம் நோக்கி சாய்த்து அமைக்கப் பெற்றுள்ளன. வலது கையில் தாமரை மலரை ஏந்தியவாறும் இடது கையைத் தொடை மீது வைத்தவாறும் காணப்படுகிறது.

தலையில் கிரீட மகுடம் காணப்படுகிறது. இதன் உச்சியில் சிகாமணி காட்டப்பட்டுள்ளது. மகுடத்தின் மையத்தில் பூரிமம் உள்ளது. தலைக்குப் பின்னால் விசிறி போன்ற அமைப்பைக் கொண்ட வட்டமான சிரச்சக்கரம் காட்டப்பட்டுள்ளது. அதன் மையத்திலிருந்து மணிச்சரம் ஒன்று தொங்குகிறது. தலைமுடி இரண்டு அடுக்குகளாய் தோளில் வரிசைப் படுத்தப்பட்டுள்ளன.

தடித்த புரிநூல் இடது தோளிலிருந்து தொடங்கி வலது கை வழியாகப் பின்னுக்குச் சென்று இடது தோளை சென்றடைகிறது. இவ்வாறு தடித்த புரிநூல் காட்டுவதும் அது வலதுகை மீது ஏறிச் செல்வதும் இதன் தொன்மையைக் காட்டும் பிற கூறுகளாகும். புரிநூலிலிருந்து பிரிந்து இடது மார்பு வழியே தொங்கும் சிறுநூல் வலது கணுக்கால் வழியே பின்னால் சென்று அக்கால் வழியாகவே மேலேறிச் சென்று இடது தோளில்

இணைகிறது. பீதாம்பரம் கணுக்கால் வரை தொங்குகிறது. இருபக்கமும் கச்சைகள் இடுப்பிலிருந்து கணுக்கால் வரை தொங்குகின்றன.

காதுகளில் அணிந்துள்ள மகர குண்டலங்கள் நன்கு கீழிறங்கி தோள்களில் தவழ்கின்றன. கழுத்தில் மடிப்புக்கள் காட்டப்பட்டுள்ளன. கழுத்தில் கண்டிகை, பருத்த சரப்பளியும், வயிற்றில் உதரபந்தமும், கைகளில் தோள்வளைகளும் மணிக்கட்டுக்களில் வளைகளும் இடுப்பில் அரைப்பட்டிகை, தாரகைச்சும்மை ஆகிய அணிகளும் உள்ளன. இடுப்பணியிலிருந்து இரண்டு மணிவடங்கள் கால்களில் முழங்கால் வரைத் தொங்குகின்றன. இச்செப்புத்திருமேனியின் கண்கள் மட்டும் வெள்ளியால் செய்யப்பட்டு உள்ளன. இது போன்றே தஞ்சைக் கலைக்கூடத்திலிருக்கும் மேற்குறிப்பிட்ட விஷ்ணு செப்புத்திருமேனி ஒன்றில் வெள்ளிக் கண்கள் பொருத்தப்பட்டுள்ளன. வலது மார்பில் முக்கோண வடிவ ஸ்ரீவத்ஸம் காட்டப்பட்டு உள்ளது.



# 48. பாண்டியர் கால அரிய துர்க்கை சிற்பம்

கு. சேதுராமன், மதுரை.

சிவகங்கை மாவட்டம், மானாமதுரைக்கு அருகிலுள்ள தூதை கிராமப்பகுதியில் முற்காலப்பாண்டியர் காலத்தினைச் சார்ந்த துர்க்கையின் சிற்பம் ஒன்று வழிபாட்டில் உள்ளது. இது எருமைத்தலைமீது எட்டுக்கரங்களுடன் எழிலுடன் காட்சியளிக்கும் எட்டாம் நூற்றாண்டு முற்காலப் பாண்டியர் சிற்பமாகும். இதன் வலதுகரங்களில் சக்கரத்துடன் சூலம், கத்தி, அம்பு, கபாலம் உள்ளன. இடக்கரங்களில் சங்கு, கேடயம், வில் உள்ளன. கீழ் இடக்கரம் இடைமீது உள்ளது. தலையில் கரண்ட மகுடமும் காதுகளில் பத்திர குண்டலங்களும் மார்பில் புரிநூலும் காணப்படுகின்றன. இடையிலிருந்து முழங்கால்வரையுள்ள கனந்த ஆடை இதன் பழமையைப் பறைசாற்றும் நிலையில் இருபுறமும் முடியப்பட்டுத் தொங்குகின்றன.

பாண்டியநாட்டில் திருப்பரங்குன்றம், குன்றக்குடி, திருத்தங்கல் போன்ற பல்வேறு இடங்களில் துர்க்கையின் சிற்பங்கள் கிடைத்துள்ள போதும் அதிலிருந்து வேறுபட்டு கலைசிறப்பும் தனித்தன்மையும் கொண்டதாய் தூதைக்கு அருகில் கிடைத்த இத்துர்கையின் சிற்பம் காட்சியளிக்கிறது. இருகால்களையும் எருமைத்தலை மீது வைத்து நிற்கும் ஏனைய துர்க்கை பேர்ன்றில்லாமல் இடக்காலைப் பூமியில் ஊன்றி வலக்காலை எருமைத்தலைமீது வைத்துக்கொண்டு நிற்கிறது. பொதுவாக சங்கு, சக்கரம் ஏந்தி நிற்கும் ஏனைய துர்க்கைக்கு மாறாக இது வலது மேல்கரத்தில் காளி, சிவனுக்குரிய முத்தலை சூலத்தைச் சக்கரத்தோடு ஏந்திக்கொண்டு நிற்கிறது. மேலும் ஏனைய துர்க்கையினைப் போன்று வலது கீழ்கரத்தில் அபயம் காட்டி நிற்காது காளியைப் போன்று கபாலம் ஏந்திக் காட்சியளிக்கிறது. கபாலம் ஏந்திய இக்கையில் கிளி ஒன்றையும் ஏந்தி காட்சியளிப்பது இச்சிற்பத்தை ஏனைய சிற்பங்களிலிருந்து மேலும் வேறுபடுத்துகிறது.

கொற்றவை அல்லது துர்க்கை தனது கரத்தில் கிளியை ஏந்திக் கொண்டு நிற்பதுபோல் வடிப்பது அரிய வழக்கமாகும். ஆனால் இவ்வழக்கம் இலக்கியங்களில் காணப்படுகிறது. யாப்பருங்கலம் விருத்தியுரையில் காணும் கொற்றவை குறித்த பாடல்களில் கொற்றவை கிளியை ஏந்திக் காட்சியளிப்பவளாகக் காட்டப்பட்டுள்ளாள். இலக்கிய வழக்கில் காணும் இம்மரபினைப் பாண்டியநாடு கொற்றவை சிற்பப்படைப்பிலும் காண முடியும் என்பதற்கு எடுத்துக்காட்டாய் தூதையிலுள்ள துர்க்கை சிற்பம் திகழ்கிறது.

இச்சிற்பத்தைப் படைத்த சிற்பி சூலத்தையும், கபாலத்தையும் ஏந்திய காளியை தனது மனத்திற்குள் வைத்துக் கொண்டு செய்துள்ளான். மேலும் ஆயுதங்களுடன் பெண்மையின் வன்மையை காட்டுகிற அதேநேரத்தில் அதன் மென்மையை காட்டுகிற முறையில் பைங்கிளி ஒன்றை அதன்கரத்தில் தவழவிட்டுள்ளது எதிர்மறை இரசனையை வெளிப்படுத்தும் சிற்பியின் திறம் எனலாம்.

# 49. தேன்குணம் பாறை ஓவியம்

அனந்தபுரம் கோ.கிருட்டிணமூர்த்தி, கடலூர்.

விழுப்புரம் மாவட்டம் உளுந்தூர்பேட்டைக்கு வடமேற்கில் சுமார் 20 கி.மீ. தொலைவில் உள்ளது தேன்குணம். ஊருக்கு வடக்கில் உள்ள ஏரியின் வடக்கில் கிழக்கு மேற்காக இரு குன்றுகள் உள்ளன. குன்றின் நான்கு திசைகளில் உள்ள நிலப்பகுதியில் தொல்பழங்காலத்து மக்கள் வாழ்ந்ததற்கான பானை ஓடுகள் காணக்கிடைக்கின்றன. குறிப்பாக செல்லியம்மன் குன்றுக்குத் தெற்கு திசையில் உள்ள நிலப்பகுதியில் கருப்பு, சிவப்பு, மற்றும் கருப்பு சிவப்பு கலந்த பானை ஓடுகள் காணப்படுகின்றன. செல்லியம்மன் குன்றின் கீழ்திசையில் உள்ள இயற்கையான பாறையின் கிழக்கு குன்றுப் பகுதியில் கீழ் பகுதியில் சிவப்பு - (காவி) நிறத்தால் வரைந்த ஓவியங்கள் காணப்படுகின்றன.

விலங்கு, மனித உருவம், நாய், மயில் சூலம் போன்ற உருவங்கள் வரையப்பட்டுள்ளன. விலங்கின் உடல் பெருத்தும் கழுத்து உயர்ந்தும் தலை சிறுத்தும் உள்ளன. ஒரு விலங்குக்கு (அடுத்ததொரு விலங்கு பின்தொடர்ந்து செல்கிறது. இந்த இரண்டு விலங்குகளுக்கு) எதிரில் நாய் நிற்கிறது. விலங்கின் உடல் முழுவதும் தோல் காட்டப்படாமல் வரி வரியாகத் (வரிக்குதிரை போல வரிகள்) தீட்டப்பட்டிருக்கிறது.

பாறையின் மய்யப் பகுதியில் பறவை முகம் கொண்ட உயரமான மனிதன், வலது கையை உயர்த்தியும் இடது கையை நீட்டியும் உள்ள நிலையில் நின்றவாறு உள்ளான். இம்மனித உருவத்திற்கு எதிரிலும் பின்புறமும், கீழே இருந்த ஓவியங்கள் முற்றிலும் அழிந்து போய் உள்ளன.

மற்றொரு இடத்தில் இடது காலை சற்றுத் தூக்கி முன்வைத்தும், இடது கையை நீட்டியும் உள்ள நிலையில் மற்றொரு மனித உருவம் வரையப்பட்டுள்ளது. இவ்வுருவத்தின் கீழ், இடது வலது ஆகிய பக்கங்களில் ஓவியங்கள் வரையப்பட்டு அழிந்துபோயின. பாறையின் மற்றொரு முனைப் பகுதியில் சூலம் போன்ற ஓவியமும் வரையப்பட்டுள்ளன. இவ்வோவியத்திற்கு கீழ்ப்பகுதியில் மயில் ஒன்று நின்று உள்ளது. ஓவிய நிறம், மனித உருவம், முகம் ஆகியன கீழ்வாலை ஓவியத்தோடு தொடர்புடையனவாகவே அறியமுடிகிறது.

# 50. பொகலூர் பாறை ஓவியங்கள்

கி. குமார், சென்னை.

வேலூர் மாவட்டம், குடியாத்தம் வட்டத்தில் பொகலூர் கிராமம் அமைந்துள்ளது. போகலூர்க்குத் தெற்கே பொகலூர் மலை என்றழைக்கப் படும் ஆயிரம் அடி உயரம் கொண்ட மலை உள்ளது. இது கிழக்குத் தொடர்ச்சி மலையின் ஒரு பகுதியாகும்.

பொகலூர் மலையின் சரிவுகள் மற்றும் மேற்பரப்பு பகுதிகளில் இயற்கையாக அமைந்த குகைகள் பல உள்ளன. அவற்றுள் சில குகைகளில் வெண்மை நிறத்தில் தீட்டப்பட்ட ஓவியங்கள் காணப்படுகின்றன. தாமரைச்சுனை குகை என்றழைக்கப்படும் குகையில்தான் அதிகமான ஓவியங்கள் தீட்டப்பட்டுள்ளன. இக்குகையில் செங்காவி, நிறத்தில் தீட்டப்பட்டிருந்த சில ஓவியங்கள் அழிந்து காணப்படுகின்றன. ஆனால், வெண்மை நிறத்தில் தீட்டப்பட்டுள்ள சில மனித உருவங்கள் கையில் ஆயுதங்களை ஏந்தியவாறு நடந்து செல்வதைப் போன்றும், சில மனிதர்கள் கழுதை அல்லது குதிரையைப் போன்ற விலங்குகளின்மீது அமர்ந்து செல்வதைப் போன்றும் சித்தரிக்கப்பட்டுள்ளன.

ஆடு, மாடு, குதிரை, மான், முயல் போன்ற விலங்குகளின் உருவங்களும், மயில், புறா போன்ற சில பறவைகளின் உருவங்களும் தீட்டப்பட்டுள்ளன. இவைகள் தவிர, திரிசூலம், அம்பு, கத்தி போன்ற ஆயுதங்களும், நாமம் போன்ற சமயம் சார்ந்த குறியீடுகளும் கட்டமிடப்பட்ட குறியீடுகளும் இக்குகையில் வரையப்பட்டுள்ளன.

பாறை ஓவியங்கள் அமைந்துள்ள தாமரைச்சுனை குகைக்கு அருகே இரும்பு காலத்தில் அமைக்கப்பட்ட பல பெருங்கற்படை சின்னங்கள் காணப்படுகின்றன. மேலும், அதே காலத்தில் வாழ்ந்த மக்களால் பயன்படுத்தப்பட்ட மட்பாண்டங்களான கருப்பு-சிவப்பு, சிவப்பு மற்றும் கருப்பு நிற பானை ஓடுகளும் இரும்புக் கழிவுகளும் இதே பகுதியில் காணப்படுகின்றன. மேலும், பொகலூர் மலையைச் சுற்றியுள்ள சரிவுகளிலும் சமவெளிப் பகுதிகளிலும் இரும்புகாலத்தைச் சேர்ந்த வாழ்விடங்கள் காணப்படுகின்றன.

ஆகவே, பொகலூர் மலை தாமரைச்சுனை குகையில் தீட்டப்பட்டுள்ள ஓவியங்கள் அனைத்தும் இரும்புக் காலத்தைச் சேர்ந்தவைகள்தான் என அறுதியிட்டுக் கூறலாம்.

# 51. காவிரிப் படுகையில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

வீ. செல்வகுமார், தஞ்சாவூர்.

கீழ்க்காவிரிப் படுகையில் பாயும் காவிரியின் கிளை நதிகளான முடிகொண்டான், திருமலைராசன் மற்றும் அரசலாற்றின் கரைகளில் 2005-06 ஆண்டுகளில் கள ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டன.

## இடைக்கற்காலத் (Mesolithic) தடயங்கள்

### அ) வாழ்மங்கலம்

இக்கிராமம் நாகபட்டினம் மாவட்டத்தில் நாகப்பட்டினத்திலிருந்து நன்னிலம் செல்லும் சாலையில் திட்டச்சேரிக்கு அருகில் உள்ளது. திட்டச்சேரியிலிருந்து புதுச்சேரிப் பகுதியிலுள்ள திருமலைநாயன்பட்டினம் செல்லும் வழியில், சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ள இக்கிராமத்தின் கிழக்குப்பகுதியில் சுமார் ஒரு சதுர கி.மீ. பரப்பளவுள்ள வெள்ளரித்திடலில் தோண்டப்பட்ட குழிகளிலிருந்து சிக்கி முக்கி கற்களால் செய்யப்பட்ட நுண்கற்செதில்கள் காணப்பட்டன. இங்கு ஒரு சுடுமண் உறை கிணற்றின் பகுதிகளும் காணப்பட்டன.

### ஆ) திருமலைநாயன் பட்டினம் - போலகம்

திருமலைநாயன் பட்டினம் காரைக்காலிலிருந்து சுமார் 5 கி.மீ. தெற்கே நாகப்பட்டினம் செல்லும் கிழக்குக் கடற்கரைச் சாலையில் உள்ளது. புதுச்சேரி மாநிலத்தைச் சார்ந்த இவ்வூரின் தெற்குப் பகுதியில் போலகம் என்ற கிராமம் உள்ளது. இக்கிராமத்தின் தெற்குப்பகுதியில் புதியதாக அமைக்கப்பட்டு வரும் தொழில் வளர்ச்சி மைய வளாகத்தில் மண் எடுத்த குழிகளிலிருந்து சிக்கி முக்கி கற்களால் செய்யப்பட்ட செதில்களும், மூலகற்களும் அதிக அளவில் முதன்மையான அமைவிடத்தில் காணப்படுகின்றன. இத் தடயங்கள் தரை மேற்பரப்பிலிருந்து சுமார் 50 செ.மீ. ஆழம் வரையுள்ள வண்டல் மண்ணில் கண்டறியப்பட்டன. வாழ்மங்கலத்தைப் போலவே இம்மண்ணிலும் இரும்புத் தன்மையுடைய கற்கள் உள்ளன.

காவிரிப் படுகைப் பகுதியில் நாகபட்டினம் அருகே உள்ள வாஞ்சூரிலிருந்து, மயிலாடுதுறை அருகே உள்ள தில்லையாடி வரை, திருமலைராயன் பட்டினத்தில் உள்ளது போன்ற மண்மாரி பொழிந்த இடங்கள் காணப்படுவதாக இப்பகுதி மக்கள் கூறுகின்றனர். இம்மண் இங்கு காணப்படும் நுண்கற்கள் புதியதாக வெள்ளத்தில் உருண்டதற்கான தடயம் இல்லாமல் காட்சியளிக்கின்றன. இங்கு நுண்கற்கள் பானை ஓடுகளுடன் கலக்காமல் காணப்படுவதால் இவை இடைக்கற்காலத்தைச் சேர்ந்தவை எனக் கருதலாம்.

கடற்கரையிலிருந்து சுமார் 2 கி.மீ. தூரமே உள்ள திருமலை நாயன்பட்டினம் பகுதியில் காணப்படும் நுண்கற்கள், இடைக்கால மனிதன் இங்கு வாழ்ந்ததற்கு மிக முக்கியமான ஆதாரமாகும். இதற்குமுன் காவிரிப் படுகையில் இடைக்கற்காலத் தடயங்கள் கண்டுபிடிக்கப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் காவிரி படுகையின் தென்கிழக்குப் பகுதியில் உள்ள வல்லம் மண்மேல் பரப்பில் இவ்வித நுண்கற்கள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இடைக்கற்காலக் கருவிகள் தமிழகத்தின் பல பகுதிகளிலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. குறிப்பாக தமிழகத்தின் கடலோரப் பகுதிகளில் திருச்செந்தூருக்கு அருகில் உள்ள 'தேரி' எனப்படும் செம்மண் குன்றுகள் பாண்டிச்சேரிக்கு அருகில் உள்ள செம்மண் குன்றுகள் மற்றும் தற்போது திருமலைநாயன் பட்டினத்தில் உள்ள மண் படிவுகளில் காணப்படும் நுண்கற்கள், இடைக்கற்கால மக்கள் தமிழகக் கடற்கரைப் பகுதிகளில் பரவலாக வாழ்ந்து வந்தார்கள் என்பதைத் தெளிவாக உணர்த்துகின்றன. ஆனால் இடைக்கற்கால மக்களின் வாழ்க்கை முறையைப் பற்றி அறிவதற்கு கூடுதல் ஆய்வு நடத்தப் பெற வேண்டும்.

## இரும்புக்கால மற்றும் வரலாற்றுக் காலத் தடயங்கள்

### அ) புதுக்குடி :

கும்பகோணம் வட்டம் நாச்சியார்கோவிலிலிருந்து சுமார் 7 கி.மீ. தொலைவில் பூந்தோட்டம் சாலையில் புதுக்குடி என்ற கிராமம், அரசலாற்றின் தென்கரையில் அமைந்துள்ளது. இக்கிராமத்தின் தென்மேற்குப் பகுதியில் வயல்வெளியில் 'பருத்திக்கா மேடு' என்ற திடல் உள்ளது. சுமார் 1 ஏக்கர் பரப்பளவும் 4 அடி உயரம் உள்ள இத்திடலில் கருப்பு-சிவப்பு மற்றும் சொரசொரப்பான சிவப்பு நிற பானை ஓடுகள் காணப்படுகின்றன. இது ஒரு இரும்புக்கால வரலாற்று ஆரம்பகால ஊரிருக்கையாகும்.

### ஆ) நன்னிலம்

இங்குள்ள அரசு மருத்துவமனை வளாகத்தில் கட்டிடம் கட்டுவதற்காக குழி தோண்டிய போது கருப்பு-சிவப்பு பானை ஓடுகளும் சொரசொரப்பான சிவப்பு நிற பானை ஓடுகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இது சுமார் 3 ஏக்கர் பரப்பளவுள்ள இரும்புக்கால, வரலாற்று ஆரம்ப கால மற்றும் இடைக்காலத் தடயங்கள் உள்ள ஓர் ஊரிருக்கையாகும். இதேபோன்று பூந்தோட்டத்தில் இருந்து காரைக்கால் செல்லும் சாலையில் திருமலைராசன் ஆற்றின் கரைகளில் அமைந்துள்ள இடங்களான பண்டாரவாடை, திருமாளம், அம்பல், புளுகநாதபுரம், ரெட்டகுடி போன்ற இடங்களிலும் இரும்புக்காலத்திற்கு உரிய எச்சங்கள் காணப்படுகின்றன.

# 52. வெள்ளாற்றுப் பள்ளத்தாக்குத் தொல்லியல்

வெ. யோகேஸ்வரன், குப்பகுடி.

திருச்சி மாவட்டம் மருங்காபுரிக்கு அருகில் வேழமலையில் தொடங்கி இலுப்பூர் வட்டம் மீனவேலி கண்மாயில் பாய்ந்து குடுமியான்மலை, பேரையூர், வளநாடு, திருவுடையார் பட்டி, ஆளப்பிறந்தான், பெருமருதூர், சிறுவரை, மணமேல்குடி வழியாக சென்று இறுதியாக புதுக்கோட்டை மாவட்டம் மணமேல்குடி வட்டத்தில் உள்ள "வடக்கு அம்மாப்பட்டினம்" என்ற ஊருக்கு அருகில் "வெள்ளாத்து முனை" என்ற இடத்தில் வெள்ளாறு வங்கக் கடலில் கலக்கிறது.

வெள்ளாற்றின் மேல் பகுதியில் ஆய்வு செய்து கல்வட்டம், பரல் உயர் பதுக்கை, தாழி போன்ற ஈமச் சின்னங்களை ஆய்வாளர்கள் ஏற்கனவே இனம் கண்டுள்ளனர். வெள்ளாற்றின் கீழ்ப்பகுதியில் (அறந்தாங்கி, ஆவுடையார்கோவில், மணமேல்குடி) கள ஆய்வில் முதுமக்கள் தாழிகள், கருப்பு, சிவப்பு, மட்பாண்ட ஓடுகள், கருப்பு வண்ண வளவளப்பான தாங்கிகள், தட்டுகள், குடுவைகள், குறியீடுகள், இரும்பு (வாள்) ஆகியவை காணப்பட்டன. மேலும் அறந்தாங்கி வட்டத்தில் உள்ள இடையார் மற்றும் ஆவுடையார்கோவில் வட்டத்தில் உள்ள கள்ளக்காத்தன் போன்ற இடங்களில் பளிங்குக் கல்லினாலான நுண்கற்கருவிகளும் கண்டறியப் பட்டன.

இங்கு காணப்படும் ஈமச்சின்னங்கள் பெரும்பான்மையானவை ஏரி அல்லது குளத்தினுடைய கரைப்பகுதியிலேயே அமைந்து இருப்பது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். வேளாண்மைக்குப் பயன்படாத மேட்டுப் பாங்கான நிலப்பகுதியிலும், தரிசு நிலப்பகுதியிலும் இவை அமைக்கப்பட்டு உள்ளன.

தமிழ்நாட்டில் முதுமக்கள் தாழிகள் கடற்கரையோர மாவட்டங்களில் பரவலாகக் காணப்படுகின்றன. குறிப்பாக வெள்ளாற்றுப் பள்ளத்தாக்கின் கீழ்ப்பகுதியில் இவ்வகை தாழிகள் பெரும்பாலும் அதிக அளவில் காணப்படுகின்றன. கையினால் வனையப்பட்ட தாழிகள் அகன்ற வாய்ப் பகுதியையும் உருண்ட உடற்பகுதியும் கொண்டு காணப்படுகின்றன. தாழியின் அடிப்பகுதி செங்குத்தாக நிறுத்துவதற்கு ஏற்றாற்போல் கூர்மையாக அமைக்கப்பட்டுள்ளன. இவை பெரும்பாலான நேரங்களில் தரைப்பகுதியின் கீழே தேவையான அளவிற்கு குழி ஒன்று வெட்டப்பட்டு அதனுள் செங்குத்தாக நிறுத்தப்பட்டுள்ளன. தாழியினுடைய உட்புறத்திலும், வெளிப்புறத்திலும் ஈமப் பொருட்கள் காணப்படுகின்றன. இறுதியில் சுடு மண்ணாலான மூடியைக் கொண்டும், சிறிய அளவிலான கல்லைக் கொண்டும் இவை மூடப்பட்டுள்ளன.

அறந்தாங்கிப் பகுதியில் மேற்கொண்ட கள ஆய்வில் இரும்புக் காலத்தைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள் கீழ்க்கண்ட இடங்களில் கண்டறியப்பட்டன.

**அறந்தாங்கி வட்டம் :** அமர சமுத்திரம், அழியா நிலை, ஆலங்குடி, ஆளப்பிறந்தான், இடையார், கருவிடச்சேரி, காயக்காடு, கீழ்காத்தி, குறும்பூர், கொங்கன்கிராமம், தந்தானி, துரைராசபுரம், தெற்குத் திருநாளூர், நாயக்கப்பட்டி, பஞ்சாத்தி, பத்தரசர்கோட்டை, பரமந்தூர், பாண்டிக்குடி, பாலகிருஷ்ணபுரம், புதுவாக்கோட்டை, புள்ளவயல், பெருமாள்பட்டி, மாங்குடி, மேற்குவல்வாரி, வடக்குமேல்மங்கலம், வடநற்பவளக்குடி, வீரமங்கலம்.

**ஆவுடையார்கோவில் வட்டம் :** அமரடக்கி, ஆவணம், கள்ளக்காத்தன், காரக்கடி, சிறுகாச வயல், சிறுமருதூர், பரிவீரமங்கலம், பனையவயல், பெருமருதூர்.

**மணமேல்குடி வட்டம் :** கார்க்கமங்கலம், தண்டலை, பட்டங்காடு, மஞ்சக்குடி, ரெட்டபாளயம்.



பாலகிருஷ்ணபுரம்



தெற்குத்திருநாளூர்

# 53. பெரம்பலூர் வட்டாரத் தொல்லியல்

எம்.எஸ்.ராம்ஜி, கீழக்கொளத்தூர்.

தமிழகத்தின் வறட்சியான பகுதிகளில் பெரம்பலூர் வட்டார பகுதியும் ஒன்றாகும். இப்பகுதியில் தமிழக வரலாற்றை மீள் உருவாக்கம் செய்ய உதவும் தொல்லியல் சான்றுகள் பரவலாகக் களஆய்வு மூலம் கண்டறியப்பட்டுள்ளன. அந்த வகையில் இந்த மாவட்டத்தில் பழங்கற்காலம், நுண்கற்காலம், புதிய கற்காலம், இரும்பு காலம், வரலாற்றுக் காலத்தைச் சேர்ந்த தொல்லியல் தடையங்கள் கண்டறியப்பட்டுள்ளன.

**பழங்கற்காலம்**

இப்பண்பாடு நக்கம்பாடி, விளாங்குடி, அய்க்கால், அம்பாபூர், தேளூர், கீழக்கொளத்தூர், காட்டூர், ஏலாக்குறிச்சி போன்ற இடங்களில் கண்டறியப்பட்டுள்ளன. இவ்வூர்களில் கீழ்க்கற்காலப் பண்பாட்டு கருவிகளான கோடரிகள், செதுக்குக் கருவிகள், வட்டு கருவிகள், கிழிப்பான் போன்ற கருவிகளும் அதனுடன் கற்சுத்தியல் போன்ற தொல்பொருட்களும் கண்டறியப்பட்டுள்ளன. இப்பகுதியில் இராபர்ட் புருஸ்புட் நின்னியூர் பகுதியில் பழங்கற்காலப் பண்பாட்டை கண்டுபிடித்துள்ளார். அதனைத் தொடர்ந்து இப்பகுதியில் தற்போது மேற்கூறப்பட்ட இடங்களில் பழங்கற்காலப் பண்பாடு கண்டறியப்பட்டுள்ளன. இப்பகுதியில் தொல்பழங்கால வரலாறு, விளாங்குடியினை மையமாகக் கொண்டது என்பதற்குச் சான்றாக விளாங்குடி ஓடைப் பகுதியில் பழங்கற்காலத் தொழிற்கூடம் கண்டறியப்பட்டுள்ளது. இவ்வோடையை ஒட்டிய மண்டபத்தேரி, கலசக்காடு போன்ற பகுதிகளில் மூலக் கற்களிலிருந்து கருவிகள் உருவாக்கும்போது உண்டாகும் செதில்கள் போன்றவை பரவலாகக் கிடைக்கின்றன. தரையுடன் இயற்கையாக அமைந்த பாறைகளில் கருவிகள் உருவாக்க கற்கள் வெட்டப்பட்டுள்ளன. மேலும் வெட்டப்பட்ட கற்கள் கொண்டு தரையுடன் அமைந்த பாறையின் மீது கற்களை மோதி கருவிகள் உருவாக்கியதில் எச்சமாக இயற்கைபாறையில் அதனுடைய காயங்கள் (தழும்புகள்) தெரிகின்றன.

மேலும் இந்தப் பகுதியில் பல கைகோடரிகளுடன் சில முற்றுப் பெறாத கைக்கோடரிகளும் கிடைக்கப்பெற்றுள்ளன. மேலும் கருவிகள் உண்டாக்கும்போது ஏற்படும் செதில்களும், மற்றும் மூலக்கற்களும் கற்சுத்தியலும் பரவலாக கிடைக்கப் பெறுவதினைக் கொண்டு இவ்விடம் கற்கருவிகளை உருவாக்கிய தொழிற்கூடமாக இருக்கக்கூடும் என்று கருதலாம்.

**நுண்கற்காலம்**

தற்போது பரவலாக இப்பண்பாடு தமிழகத்தில் கண்டறியப்பட்டு வருகிறது. அந்த வகையில் பெரம்பலூர் வட்டாரத்தில் அதிகமாக

மருதையாறை ஒட்டிய பகுதிகளில் சுமார் பதினைந்திற்கும் மேற்பட்ட இடங்களில் நுண்கற்காலப் பண்பாட்டு கூறுகள் கண்டறியப்பட்டுள்ளன. பர்மாகாலனி, பார்ப்பனச்சேரி, வாரணவாசி, மேட்டுகிருஷ்ணபுரம், சாத்தம்பாடி, முட்டுவாஞ்சேரி, குணமங்கலம், அருண்மொழி, தேளூர், அய்க்கால், சவர்க்காடு, காவனூர், நக்கசேலம், டி.களத்தூர், சின்னவெண்மணி, பெரியவெண்மணி, அயன்பேரையூர் ஆலம்பாடி, கீழப்புலியூர் போன்ற பகுதிகளில் இப்பண்பாடு காணப்படுகின்றன. இப்பண்பாட்டுக் கருவிகள் பளிங்குக்கல், செர்ட், சால்சிடோனி, அமெதிஸ்ட், போன்ற மூலகற்களால் உருவாக்கப்பட்டுள்ளன. மேட்டுக் கிருஷ்ணாபுரம், கீழக்கொளத்தூர், நக்கசேலம் போன்ற இடங்களில் நுண்கருவிகளை உருவாக்கியுள்ளனர். அதற்குச் சான்றாக கருவிகள் உருவாக்கும் போது ஏற்படும் செதில்கள் மற்றும் செதில் எடுக்கப்பட்ட மூலகற்கள் போன்றவை கிடைத்தன.

**புதிய கற்காலம்**

சுமார் பத்துக்கும் மேற்பட்ட பகுதிகளில் புதியகாலப் பண்பாடு கண்டறியப்பட்டுள்ளது. விளாங்குடி, பர்மாகாலனி, பார்ப்பனச்சேரி, மேட்டுக்கிருஷ்ணாபுரம், கல்லக்குடி, சாத்தம்பாடி, துலார், ஓட்டக்கோவில் போன்ற இடங்களில் கண்டறியப்பட்டுள்ளன. கல்லக்குடியில் முதுமக்கள் தாழியுடன் புதியகற்கால கோடரி கிடைத்துள்ளது. பெரும்பாலும் புதியக் கற்காலப் பண்பாடு இப்பகுதியில் மருதையாற்றை ஒட்டிய பகுதிகளிலேயே அதிகமாக உள்ளன. மேலும் புதியகற்காலத்திற்குரிய மண்பாண்டமாகக் கருதப்படும் கையினால் தேய்க்கப்பட்ட சாம்பல் நிற மட்பாண்ட துண்டுகள் பார்ப்பனச்சேரி, அய்கால் போன்ற பகுதிகளில் கிடைக்கப்பெற்றுள்ளன.

**இரும்புக் காலம்**

இப்பகுதியில் கீழக்கொளத்தூர், ஏலாக்குறிச்சி, திருமானூர், பர்மாகாலனி, பார்ப்பனச்சேரி, மேட்டுக்கிருஷ்ணாபுரம், குணமங்கலம், சாத்தம்பாடி, முட்டுவாஞ்சேரி, அருண்மொழி, ஸ்ரீபுரந்தான், புதுநடுவலூர், நொச்சியம், பாளையம், செல்லியம்பாளையம், பொம்னாப்பாடி, டி.களத்தூர், கண்ணாப்பாடி, புதூர், மேட்டுப்பாளையம், அம்மா பாளையம், லாடபுரம், ஏரிக்கரை, தேளூர், தேனூர், சின்னவெண்மணி, பெரிய வெண்மணி, நக்கசேலம், ஆலம்பாடி, எசனை, வெங்கனூர், அன்னிமங்கலம் போன்ற ஊர்களில் இப்பண்பாட்டுக் கூறுகள் கண்டறியப்பட்டுள்ளன. இப்பகுதியில் தாழிகளே அதிகமாக உள்ளன. ஏரிக்கரை, தேனூர், புதுநடுவலூர், டி.களத்தூர், போன்ற ஊர்களில் கல்வட்டம், கற்பதுக்கை கற்குவை போன்ற அமைப்பு காணப்படுகின்றன. புது நடவலூரில் இரும்புக் காலத்திய நெடுகல் அமைப்பு கண்டறியப்பட்டுள்ளது.

# 54. மேட்டூர் வட்டாரத் தொல்லியல்

இரா. ரமேஷ், தஞ்சாவூர்.

சேலம் மாவட்டத்தின் வட மேற்கில் சுமார் 50 கி.மீ. தொலைவில் கருநாடகத் தமிழக எல்லைப்பகுதியாக மேட்டூர் பகுதி விளங்குகிறது. இங்கு மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் நாற்பதுக்கும் மேற்பட்ட தொல்லியல் அமைவிடங்கள் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. காவிரியாற்றுப் பகுதியில் பத்திற்கும் மேற்பட்ட இரும்புக்கால மற்றும் புதியகற்கால பண்பாட்டுச் சின்னங்கள் கண்டறியப்பட்டுள்ளன. இரும்புக்கால ஈமச்சின்னங்களான கல்வட்டம், கற்பதுக்கை மற்றும் கற்குவை ஆகியவைகளும், புதியகற்காலக் கருவிகளும் பெருமளவில் காணப்படுகின்றன.

காவிரியாற்றின் வலக்கரையில் கர்நாடக எல்லைப்பகுதியில் உள்ள கோபிநத்தத்திற்கு கிழக்கே 1.5 கிலோ மீட்டர் தொலைவில் 50க்கும் மேற்பட்ட கற்குவையும் தற்போது உள்ள ஊரே வாழ்விடப்பகுதியாகவும் அறியப்பட்டது. இங்கு புதியகற்காலக் கருவி வழிபாட்டுப் பொருளாக இருந்து வருகிறது. மார்கொட்டாய்மேடு என்னும் பகுதி தற்போதைய கருநாடக வனசரக பகுதியில் காவிரியாற்றின் வலக்கரையில் ஒக்கேனக்கல் நீர்வீழ்ச்சிக்கு மேற்கே 1 கி.மீ. தொலைவில் உள்ளது. இப்பகுதியில் 100க்கும் மேற்பட்ட பதுக்கைகள் மற்றும் கல்வட்டங்கள் கண்டறியப்பட்டுள்ளன. இவ்வூருக்கு வடக்கே சுமார் 5 கி.மீ. தொலைவில் ஆலம்பாடி என்ற கிராமம் உள்ளது. இங்கு விஷ்ணு கோவில் ஒன்றும் வாழ்விடத்துடன் கூடிய கல்வட்டமும் கண்டறியப்பட்டுள்ளன. புதியகற்காலக் கருவிகள் வழிபாட்டுசின்னமாக இவ்வூர் மக்களால் வழிபடப்பட்டு வருகிறது. தமிழகப் பகுதியில் காவிரியாற்றின் வலக்கரையிலும் இரும்புக்கால மற்றும் புதிய கற்காலப் பண்பாட்டுச் சின்னங்கள் கண்டறியப்பட்டுள்ளன.

மேட்டூரில் இருந்து வடமேற்கே 20 கி.மீ. தொலைவில் தெலுங்கனூர் உள்ளது. இங்கு சுமார் 7 புதியகற்காலக் கருவிகளும் காவிரியாற்றின் கரையில் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இவற்றுள் இரு கருவிகள் 3 அடி ஆழத்தில் இரும்புக்கால ஈமச்சின்னமான கல்வட்டத்தில் கிடைத்துள்ளன. காவிரியாற்றின் கரையில் இன்னும் ஏராளமான புதிய கற்காலக் கருவிகள் இருப்பதாக அப்பகுதி மக்கள் தெரிவிக்கின்றனர்.

நெட்டக்காலன்கொட்டாய், சுப்பிரமணியபுரம், புதுவேலமங்கலம் ஆகிய பகுதிகளில் இரும்புக்காலத்தைச் சேர்ந்த ஈமச்சின்னங்களான கல்வட்டங்களும், கற்பதுக்கைகளும் கண்டறியப்பட்டுள்ளன. இவற்றின் நெட்டைக்காலன் கொட்டாயில் மட்டும் 100க்கும் மேற்பட்ட கல்வட்டங் களும், கற்பதுக்கைகளும் காணப்படுகின்றன. இங்கு மூன்று புதிய கற்காலக் கருவிகள் வழிபாட்டில் உள்ளன. மேட்டூர் வட்டத்தில் புதுவேலமங்கலத்தில் மட்டுமே 20 மீட்டர் அளவு விட்டமுடைய கல்வட்டம் காணப்படுகிறது.

மேட்டூரின் வடக்கே 15 கி.மீ. தொலைவில் சேத்துக்குளி அமைந்துள்ளது. இவ்வூரின் வடக்கே ஒரு கி.மீ. தொலைவில் வாழ்விடப்பகுதியும் அவ்வாழ்விடப் பகுதியிலிருந்து கிழக்கே ஒரு கி.மீ. தொலைவில் இரும்புக்கால ஈமச்சின்னமான கல்வட்டங்களும் காணப்படுகின்றன. இங்கு காவிரியாற்றின் கரையில் இரண்டு புதிய கற்காலக் கருவிகள் வழிபடப்பட்டு வருகின்றன.

இவ்வட்டாரத்தில் காணப்படும் இரும்புக்கால ஈமச்சின்னங்கள் பெரும்பாலும் பாண்டியன் திட்டு, பாண்டியன் குழி, பாண்டியன்காடு, பாண்டியன்வீடு, பாண்டியன்கல் என்று வழங்கிவருகிறது. அதேபோல் வாழ்விடப் பகுதிகள் பெரும்பாலும் நத்தமேடு மற்றும் நத்தக்காடு என்றே உள்ளூர் மக்களால் அடையாளம் காட்டப்படுகிறது. இவ்வட்டாரத்தில் கண்டறியப்பட்டுள்ள இரும்புக்கால ஈமச்சின்னங்கள் பெரும்பாலும் பெரிதும் சிதைக்கப்பட்ட நிலையிலும் ஒருசில இடங்களில் முற்றிலுமே சிதைக்கப்பட்ட நிலையிலுமே காணப்படுகின்றன. பல ஈமச்சின்னங்களும் வாழ்விடப்பகுதிகளும் மேட்டூர் அணையின் நீர்மட்ட உயர்வின் காரணமாக நீரினுள் மூழ்கியுள்ளன. புதியகற்காலக் கருவிகள் பெரும்பாலும் ஆற்றுப் படுகைகளிலேயே அதிகளவில் காணப்படுகின்றன. இவைகளை வழிபடும் வழக்கம் இப்பகுதி மக்களால் தொன்று தொட்டு இருந்து வருகிறது.



கோபிநத்தம்



மார்கொட்டாய் மேடு



தெலுங்கனூர்



சேத்துக்குழி

# 55. செங்கம் வட்டாரத் தொல்லியல் எச்சங்கள்

இ. இனியன், சென்னை.

திருவண்ணாமலை மாவட்டம், செங்கம் வட்டத்தில் மேற்கொள்ளப் பட்ட களஆய்வின் போது இரும்புக்காலம் மற்றும் வரலாற்றுக் கால எச்சங்கள் கண்டறியப்பட்டுள்ளன. தண்டராம்பட்டு-தானிப்பாடி இடையே ஒலகலாப்பாடி அமைந்துள்ளது. இவ்வூரின் .கிழக்கே உள்ள காட்டுப்பகுதியில் சுமார் 25 கல்வட்டங்கள் காணப்படுகின்றன. இக்கல் வட்டங்களின் விட்டம் 3 மீ. முதல் 6 மீ. அளவில் அமைந்துள்ளன. திருவண்ணாமலை - தானிப்பாடி சாலை த.வேளூருக்கு அருகில் பக்கிரிப்பாளையம் அமைந்துள்ளது. இங்கே காணப்படும் ஈமச் சின்னங்கள் கல்வட்ட வகையைச் சார்ந்தவை. இவற்றில் கற்பதுக்கைகள் மேல் மூடியுடன் காணப்படுகின்றன.

தானிப்பாடி - அரூர் நெடுஞ்சாலையிலிருந்து 5 கி.மீ. தொலைவில் மலையனூர் சேக்கடி மற்றும் பீமாரப்பட்டிக்கு இடையே மேட்டுப் பாளையம் அமைந்துள்ளது. இவ்வூருக்குச் செல்லும் சாலையின் இருபக்கங்களிலும் 40 ஏக்கர் பரப்பளவில் கல்வட்டங்களும், கற்குவியல்களும் ஆங்காங்கே குறிப்பிட்ட அளவு இடைவெளிகளில் நிறைந்து காணப்படுகின்றன. சிறிய கல்வட்டங்கள் 3 மீ. முதல் 4 மீ. விட்டம் உடையனவாக உள்ளன. இப்பகுதி மக்களால் 'பாண்டியர் குடுத்தம்' என்று அழைக்கப்படும். கல்வட்டங்களின் நடுவில் கற்பதுக்கைகள் காணப்படுகின்றன. பெரும்பாலான கல்வட்டங்களும் கற்குவியல்களும் சாகுபடிக்காக பொதுமக்களால் அகற்றப்பட்டுள்ளன. தண்டராம்பட்டு-சாத்தனூர் சாலையில் தேசூர்பாளையம் அமைந்துள்ளது. இங்கே மேற்சுட்டிய இடங்களில் உள்ளவை போல் கல்வட்டங்கள் கற்பதுக்கைகளை உள்ளடக்கியதாக உள்ளன.

தண்டராம்பட்டு-சாத்தனூர் அணைச் சாலையில் வீரணம் அமைந்துள்ளது. இங்குள்ள மலைக்கு தெற்கிலும், கிழக்கே மஞ்சக்கல் மலைக்கு அடிவாரத்திலும் மிகப்பெரிய பரப்பளவில் ஈமச்சின்னங்களான கல்வட்டங்களும் கற்பதுக்கைகளும் காணப்படுகின்றன. கல்வட்டங்களின் விட்டம் 4 மீ. முதல் 9 மீ. அளவில் உள்ளன. கல்வட்டங்களின் நடுவில் காணப்படும் கற்பதுக்கைகள் சதுர வடிவில் காணப்படுகின்றன.

மேல்ராவந்தவாடிக்கும்-நீப்பத்துறைக்கும் இடையிலுள்ள மேல் வணக்காம்பாடி முனியப்பன் கோயிலுக்கு அருகில் ஒரு நடுகல் காணப்படுகிறது. இக்கல்லில் காணப்படும் வீரனது வலது கையில் குறுவாளும் அவனது அருகில் காணப்படும் பெண்ணின் இடது கையில் ஒரு விளக்கும் காட்டப்பட்டுள்ளன. (பார்க்க படம்).

# 56. நடுகற்களில் சில சொற்கள் : ஒரு மீளாய்வு

ஐராவதம் மகாதேவன், சென்னை.

**முன்னுரை**

நடுகற்கள் பெரும்பாலும் கிருஷ்ணகிரி, தர்மபுரி மாவட்டங்களிலேயே காணப்படுகின்றன. அவற்றுள் பெரும்பாலனவை வட்டெழுத்துகளில் எழுதப்பட்டவை. கி.பி. 5-9 நூற்றாண்டுகள் இவற்றின் காலமாகும். (*காலத்தால் முந்தைய தமிழ்-பிராமி* நடுகற்களும் பிந்திய தமிழ் எழுத்துகளில் உள்ள நடுகற்களும் இக்கணக்கில் சேரவில்லை). இக்கல்வெட்டுகள் அந்தப் பிராந்தியங்களில் அக்காலத்து மக்களின் பேச்சு வழக்கிலிருந்த தமிழ் மொழியைப் பதிவு செய்துள்ளன. ஆதலால் இவை வரலாற்று ஆய்வுக்கு மட்டுமன்றி தமிழியல் ஆய்வுக்கும் முக்கியமான தரவுகள் ஆகும்.

இப்பின்னணியில் நடுகற்களில் முன்னரே அறிஞர்களால் வாசித்தளிக்கப்பட்டுள்ள சில சொற்கள் மட்டும் இங்கு மீளாய்வு செய்யப்படுகிறது. இக்கல்வெட்டுகளின் மசிப்படிகள் வாசிக்குமளவுக்குத் தெளிவாக இல்லாததால் வெளியாகியுள்ள நூல்களின் அடிப்படையிலே இந்த ஆய்வு அமைந்துள்ளது. இச்சொற்களை அறிஞர்கள் மீண்டும் நேரில் பார்த்து ஆய்வு செய்வது பயனுள்ளதாக இருக்கும். இவ்வாறு செய்யத்தூண்டுபடி செய்வது இக்கட்டுரையின் நோக்கமாகும்.

**இடுவித்து/விடுவித்து**

கள்ளர் பிடித்துச் சென்ற பெண்ணை மீட்டு உயிர் துறந்தவனுக்கு எழுப்பப்பட்டுள்ள ஒரு நடுகல் "அவளை விடுவித்துத்தான்பட்டான்" என்று குறிப்பிடுகிறது. (தா.வேளூர் கம்பவர்மன் நடுகல்). ஆனால் வேறு சில நடுகற்களில் இச்சொல் 'இடுவித்து' என்று வாசிக்கப்பட்டுள்ளது. (எ.டு.: "தொறு இடுவித்துப் பட்டான்கல்" ஊத்தங்கரை மகேந்திரவர்மன் நடுகல்) நடுகற்களில் 'தொறு மீட்டு' என்றே பெரும்பாலும் குறிக்கப்படுகின்றன. ஆகையால் 'மீட்டு' என்ற பொருளைத் தரும் 'விடுவித்து' என்ற பாடமே பொருத்தமாக உள்ளது. 'இடுவித்து' என்ற சொல்லுக்கு 'மீட்டு' என்ற பொருள் இருப்பதாக வேறு சான்றுகள் இல்லை. ஆதலால் இந்தப் பாட பேதம் வாசிப்பில் ஏற்பட்ட குழப்பமாக இருக்கக்கூடும். ஏனெனில் முந்து வட்டெழுத்துகளில் 'இ' என்ற எழுத்தும் 'வி' என்ற எழுத்தும் ஏறத்தாழ ஒரே மாதிரியாகவே இருக்கும். இச்சொற்கள் இடம், பொருள் அறிந்து மீண்டும் வாசிக்கப்பட வேண்டும்.

**இளமகன்/இளமக்கள்**

'இளமகன்' என்ற சொல்லுக்கு நாகசாமி, மகாலிங்கம் போன்ற அறிஞர்கள் 'இளைய மகன்' என்று பொருள் கொண்டுள்ளார்கள்.

(எ-டு : பெரிய சோளப்பாடி மகேந்திரவர்மன் நடுகல்). ஆனால் நடுகற்களில் இந்தப் பொருள் பொருத்தமாக இல்லை. 'இளமகன்/இளமக்கள்' ஆகிய சொற்கள் நடுகற்களில் பலமுறை வருகின்றன. 'இளமகன்' என்பதற்கு 'இளைய மகன்' என்று பொருள் கொண்டால் அவன் மட்டுமே போருக்குச் சென்றான், மூத்த மகன் வீட்டிலேயே முடங்கிக் கிடந்தான் என்ற விபரீதமான முடிவுக்கு வர வேண்டியிருக்கும். மேலும் 'இளமகனின் மகன்' என்று வரும் இடங்களில் ஒருவருடைய 'பேரன்' என்று கொள்ளவும் இடமில்லை. (எ-டு : கோட்டையூர், சாத்தனூர் மகேந்திரவர்மன் நடுகற்கள்). "கூடல் இளமக்கள் நடுவித்த கல்" என்ற குறிப்பு 'இளைய மகன்' என்ற பொருளைத் தரவில்லை (சே.கூடலூர் மகேந்திரவர்மன் நடுகல்).

இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் குறிப்பிடப்படும் 'இளமகன்' (பன்மை : 'இளமக்கள்') உண்மையில் ஒரு இனப் பெயராகும். இவர்கள் 'இளையர்' என்றும் 'இளம்ராசர்' என்றும் 'சொல்இளங்கோசர்' என்றும் அழைக்கப்பட்டனர். பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் வேளிரும் அவர்களைச் சார்ந்த வேளாளர், வைசியர் போன்ற குடிகளும் மூத்தகுடியினராகவும், மழவர், கோசர் போன்ற குடியினர் இளைய குடியினராகவும் கருதப்பட்டனர். இளமக்கள் தலைவர்களிடம் மெய்க்காப்பாளர்களாகவும் போர் வீரர்களாகவும் பணிபுரிந்தனர்; ஆகையால் இவர்கள் 'சேவகர்' என்று அழைக்கப்பட்டனர். 'சேவகர்' என்ற சொல்லுக்குப் பணியாள் என்று பொருளில்லை; போர் வீரர் என்று சொல்வதே பொருத்தமானது. பல நடுகற்கள் இளமக்களாகிய சேவகர்கள் தம் தலைவர்கள் சார்பில் போரிட்டு மடிந்ததைக் குறிப்பிடுகின்றன. இச்சொற்களின் பொருள் விளக்கத்தை என்னுடைய நூலிலும் (Early Tamil Epigraphy : 587), ச.கிருஷ்ணமூர்த்தியின் நூலிலும் (நடுகற்கள் : 123) காணலாம்.

### நேத்தோர்பட்டி

வீரமரணமடைந்தவர்களைப் போற்றி அவர்களுடைய குடும்பத்தினருக்கு வழங்கப்பட்ட நிலக்கொடை 'நேத்தோர்பட்டி' என்று நடுகற்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. (எ-டு: வெள்ளாளப்பட்டி அரிமிறைபருமர் நடுகல்). வேறு சில நடுகற்களில் இச்சொல் 'நேத்தார்பட்டி' என்றும், 'நேத்தற்பட்டி' என்றும் 'நெத்தர்பட்டி' என்றும் பலவிதமாக உருமாறிக் காணப்படுகிறது. பிற்கால நடுகற்களில் 'உதிரப்பட்டி' என்ற சொல் இதே பொருளில் வழங்குவதை அறிஞர்கள் குறித்துள்ளனர். ஆயினும் 'நேத்தோர்' என்ற சொல்லின் உண்மைப் பொருளை இவர்கள் அறிந்து கொள்ளவில்லை என்றே தோன்றுகிறது.

ச.கிருஷ்ணமூர்த்தி தம் நூலில் "நீத்தோற என்பதே நேத்தோர் என்றுள்ளது" என்று கூறியுள்ளார் (நடுகற்கள் : 310, 329). 'நீத்தோர்' என்ற சொல்லுக்குப் பழந்தமிழில் 'இறந்தவர்' என்ற பொருள் இல்லை; 'துறவியர்' என்ற பொருளே உண்டு. (எ-டு : பெருங்கதை 60 : 192). திருக்குறளில் 'நீத்தார்' என்ற சொல்லுக்குத் 'துறந்தவர்' அல்லது 'நீங்கினவர்' என்பதே

பொருள் (திருக்குறள் 325, 1220). நடுகற்களில் கூறப்படும் நிலக்கொடை துறவியருக்கு அல்ல, போர்வீரர்களுக்கே வழங்கப்பட்டுள்ளது.

உண்மையில் நடுகற்களில் குறிப்பிடப்படும் 'நெத்தோர்' அல்லது 'நேத்தோர்' பழந்தமிழ்ச் சொல்லாகிய 'நெய்த்தோர்' என்பதன் மரூஉ ஆகும். இச்சொல்லுக்கு 'இரத்தம்' என்று பொருள். (எ-டு) "நெய்த்தோர் மீமிசை நிணத்தின்" அகம் 9:9). சங்கப்பாடல்களிலேயே அருகிக் காணப்படும் இச்சொல் பிற்கால இலக்கியங்களிலும் கல்வெட்டுகளிலும் வழக்கிழந்து விட்டது. ஆயினும் பிற பல திராவிட மொழிகளில் இச்சொல் இன்றளவும் 'இரத்தம்' என்ற பொருளில் வழங்கிவருகிறது (DEDR 3748) ஆகையால் 'நெத்தோர்பட்டி' என்ற தொடர் பிற்கால 'உதிரப்பட்டி'க்கு இணையானது. இந்த அரிய பழந்தமிழ்சொல் நடுகற்களில் ஆளப்படுவது கவனத்துக்குரியது.

***மகன்/மக்கள்***

'மக்கள்' என்ற சொல் நடுகற்களில் பெரும்பாலும் 'மகன்' என்ற சொல்லின் மதிப்புறுபன்மையாக, அதாவது 'மகனார்' என்ற பொருளில் ஒருவரைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டுள்ளது. (எ-டு) "கங்கரைசரு மக்கள் பொன்னந்தியார்". (தொரைப்பாடி மகேந்திரவர்மன் நடுகல்). "அஞ்சினாரு மக்கள் பொற்கோவனாரு வீரவாண்ணரைசருமக்கள் பொன்மோதனா ரோடு" (மொண்டுகுழி மகேந்திரவர்மன் நடுகல்). நாகசாமியும் (**தருமபுரி கல்வெட்டுகள்** 1:65), கிருஷ்ணமூர்த்தியும் (**நடுகற்கள்** : 324) இந்த வழக்காறைத் தெளிவாக எடுத்துக் காட்டியுள்ளார்கள்.

***மருமகன்/மருமக்கள்***

'மக்கள்' என்ற சொல்லைப் போன்றே 'மருமக்கள்' என்ற சொல்லும் நடுகற்களில் பெரும்பாலும் மதிப்புறு பன்மையாக, அதாவது 'மருமகன்' என்ற பொருளில் ஒருவரைக் குறிக்கவே பயன்படுத்தப்பட்டுள்ளது. (எ-டு) "பெரும்பாணரைசரு மருமக்கள் பொற்சேந்தியாரு". (தண்டம்பட்டு மகேந்திரவர்மன் நடுகல்). "வாணகோ அரைசரு மருமக்கள் கந்தவிண்ணனார்" (கோட்டையூர் மகேந்திரவர்மன் நடுகல்). தமிழ் இலக்கியத்தில் 'மருகன்' என்ற சொல் நேரடியான உறவு முறையைக் குறிப்பது மட்டுமன்றி 'ஒரே இனத்தைச் சேர்ந்தவர்' என்ற பொதுவான பொருளிலும் ஆளப்பட்டுள்ளது. (எ-டு) 'சேரலர் மருக' (**பதிற்று**. 63:16); "சோழர் மருகன்" (**அகம்**. 356:12). அதுபோன்றே நடுகற்களிலும் 'மருமகன்/மருமக்கள்' என்ற சொற்கள் நேரடியான உறவு முறையைக் குறிக்காமல் தலைவனின் இனத்தைச் சேர்ந்தவர் என்ற பொதுவான பொருளிலேயே பயன்படுத்தப்பட்டுள்ளது. மேலே கொடுக்கப்பட்டுள்ள எடுத்துக் காட்டுகளைக் காண்க. இச்சொற்கள் நடுகற்களில் பலமுறை வருவது மேற்படி கருத்தை உறுதி செய்கிறது. இவை நேரடியான உறவுமுறைச் சொற்கள் என்று எடுத்துக் கொண்டால் தலைவனின் சகோதரியின் மகன்களோ, மாப்பிள்ளைகளோ மட்டுமே அவனுக்காகப் போருக்குச் சென்றனர் என்ற பொருத்தமில்லாத முடிவை ஏற்க வேண்டிவரும்

கிருஷ்ணமூர்த்தியும் தம் நூலில் 'மருமக்கள் என்பது உறவுமுறைப் பெயராக அன்றி அரசு புரிந்தவர் என்ற பொருளில் வீரராகவே கருத வேண்டியுள்ளது' என்று குறிப்பிட்டுள்ளார் (**நடுகற்கள்** : 172).

**பவ்வது**

தொரைப்பாடியில் மகேந்திரவர்மன் காலத்திய ஒரு நடுகல்லில் 'பவ்வது' என்ற அரிய சொல் காணப்படுகிறது. இதற்குப் 'பகைத்து' என்று கிருஷ்ணமூர்த்தி பொருள் கொண்டுள்ளது பொருத்தமாக இல்லை. (நடுகற்கள் : 162). 'பவ்வ(த்)து' என்ற சொல் பிராகிருத மொழியில் 'பவ்வ', சமஸ்கிருதமொழியில் 'பர்வ' என்ற சொற்களுக்கு இணையானது. இதற்கு 'பருவத்து' என்று பொருள் கொள்ள வேண்டும். (எ-டு) "நால்வகைப் பவ்வம்" (அருங்கலச் செப்பு 165). இச்சொல்லுக்குப் 'பௌர்ணமி' என்றும் பொருள் உண்டு (சூடாமணி I:94). இந்த நடுகல்லில் குறிப்பிடப்படும் போர் பௌர்ணமி நாளன்று நிகழ்ந்திருக்கக் கூடும்.

**துணை நூல்கள்**


கிருஷ்ணமூர்த்தி, ச. **நடுகற்கள்**, 2004.

தமிழகத் தொல்லியல்துறை, **தருமபுரி கல்வெட்டுகள்** : பகுதி I, 1975.

தமிழகத் தொல்லியல்துறை, **கிருஷ்ணகிரி மாவட்டக் கல்வெட்டுகள்,** 2007.

நாகசாமி, இரா. **செங்கம் நடுகற்கள்**, 1972.

ஐராவதம் மகாதேவன், **Early Tamil Epigraphy**, 2003.

ராஜன்,க. **South Indian Memorial Stones**, 2000.

# 57. தென்னிந்திய நடுகற்கள்*

ர. பூங்குன்றன், காட்பாடி.

நடுகல் பற்றி ஆய்வுகள் அண்மைக்காலத்தில் மிகுந்து வருகின்றன. தமிழக அரசு தொல்லியல் துறை செங்கம்-தருமபுரிப் பகுதியில் எழுபதுகளில் மிகுதியான நடுகற்களைக் கண்டுபிடித்துள்ளது. இந்நடுகற்கள் கண்டுபிடித்த பின் பல ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன.

**சங்ககால நடுகற்கள்**

அண்மையில் தேனி மாவட்டம் புலிமான்கோம்பை என்ற ஊரில் இருந்த பெருங்கற்சின்னங்களில் வைக்கப்பெற்றிருந்த பலகைக் கற்களில் தமிழ்ப்பிராமி கல்வெட்டுகள் கண்டுபிடிக்கப்பெற்றன. அவை கி.மு. 3ஆம் நூற்றாண்டினைச் சேர்ந்தவை. இவற்றை நடுகல்லின் முன்னோடி என்று கொள்ளலாம் அல்லது நடுகற்கள் என்றே கொள்ள முடியும். இக்கல்வெட்டுகள் தமிழ்ப் பிராமி எழுத்துகள் நாட்டார் வழக்கிலும் இருந்தது என்பதற்குச் சான்றாக உள்ளன. மேலும் பாண்டிய நாட்டுப் பகுதியில் பூசலில் மாண்டவர்களுக்குப் பீடும் பெயரும் எழுதி நடுகல் நடும் வழக்கம் சங்க காலத்தில் உருவாகி விட்டதையே உறுதிப்படுத்துகின்றது.

நடுகல் நடும் வழக்கம் கால்நடை வளர்ப்பு சமூகத்தில் செல்வாக்கு பெற்று விளங்கியது என்பதையும் இந்த நடுகற்கள் உறுதிப்படுத்துகின்றன. முதல் கல்வெட்டு தியன் அந்தவன் என்பவனுக்காக நடப்பெற்றது. இங்கு கூறப்பெறும் தியன் என்ற சொல் பிராகிருதச் சொல்லான 'திசன்' என்பதன் திரிபு ஆகும். இலங்கைக் கல்வெட்டுகளில் 'தேவநாம்பிய திச' என்று கூறப்பெறும் வாசகத்தில் திசன் என்ற சொல் பயின்று வருகின்றது. திசன் என்பதற்கு 'நல்ல பிறப்பு' என்று பொருள் இந்த ஒரு வடசொல் தவிர வேறு ஏதும் இல்லை. அதனால் நடுகல் கல்வெட்டுகள் தமிழ் மொழியிலேயே பொறிக்கப்பெற்றன எனலாம். அவ்வன் என்ற பெயர் அவளது என்ற பெண்பாலின் ஆண்பால் ஆகலாம். வேள்ஊர் என்ற பெயர் குறிப்பிடத்தக்கது.

நடுகற்கள் பெருங்கற்சின்னத்திலிருந்தது உருவானவை என்பதற்கு இந்த நடுகற்களும் சிறந்த சான்றுகள். பெருங்கற் சின்னங்களில் எழுத்தில்லாக் குத்துக்கற்களே நடப்பெற்றன. எழுத்தறிவு மிக்க மக்கள் வாழ்ந்த கொடுமணலில் உள்ள குத்துக்கற்களில் கூட மாண்டோர் பீடும் பெயரும் பொறிக்கப் பெறவில்லை என்பது வியப்பான செய்திதான்.

---

* திரு.ஐராவதம் மகாதேவன் தோற்றுவித்த தி.நா.சுப்பிரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு. தருமபுரியில் நடைபெற்ற ஆவணம் இதழ் 17 ஆவது வெளியீட்டு விழாவில் (22.07.2007) நிகழ்த்தப்பட்டது.

**கருநாடகத்தில் நடுகற்கள்**

கருநாடகத்தில் இதுவரை 2700 நடுகற்களைக் கண்டு பிடித்திருக்கிறார்கள். அவற்றில் 2200 பூசலில் அல்லது போரில் மாண்டவர்களுக்காக நடப்பெற்றவை. மீதமுள்ள நடுகற்களில் 300 நிசிதி கற்கள், மற்றவை சதிக்கற்கள். இவை கி.பி. 4-5ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 19ஆம் நூற்றாண்டு வரை நடப்பெற்றன. நடுகல் கல்வெட்டில்தான் காலத்தால் முற்பட்ட கன்னட எழுத்துகள் பொறிக்கப் பெற்றுள்ளன. (தாளகுண்டா நடுகல்) கருநாடகத்தின் தென்பகுதியான சித்தரதுர்கா, தும்கூர், ஹாசன், சிக்மகளூர், மைசூர், பெங்களூர், கோலார் ஆகிய மாவட்டங்களில் மிகுதியான நடுகற்கள் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. வடபகுதியில் தார்வார், கார்வார் ஆகிய மாவட்டங்களில் மிகுதியும் உள்ளன.

கருநாடகத்தில் போசளர் காலத்தில்தான் நடுகற்கள் மிகுதியும் கிடைக்கின்றன. காலத்தால் முற்பட்ட நடுகற்கள் தார்வார், பெங்களூர், தும்கூர், மைசூர், கோலார் ஆகிய மாவட்டங்களில் கிடைக்கின்றன. கி.பி. 10-13 ஆம் நூற்றாண்டுகளில் நடப்பெற்ற நடுகற்கள் ஹாசன், மைசூர், மாண்டியா, ஷிமோகா ஆகிய மாவட்டங்களில் மிகுதியும் கிடைக்கின்றன. இந்த மாறுபட்ட நிலைக்குக் காரணம் என்ன என்பது இனிவரும் ஆய்வுகள் தான் உறுதிப்படுத்த வேண்டும். கருநாடகத்தில் தொறு கோள், பெண் பாதுகாப்பு, ஊர்க்கொலை, மக்கள் பாதுகாப்பு ஆகிய காரணங்களுக்காக இறந்தவர்களுக்கு நடுகற்கள் நடப்பெற்றுள்ளன. அங்கு நிரைகோடல், மிட்டலில் இறந்தவர்களுக்கு எடுக்கப்பெற்ற நடுகற்கள் 40 சதவீதம், ஊர்ப் பூசலில் இறந்தவர்களுக்கு நடப்பெற்ற நடுகற்கள் 20 சதவீதம் ஆகும். பெரும்போர்களில் இறந்தவர்களுக்கு நடப்பெற்ற நடுகற்கள் 26 சதவீதம் ஆகும். இந்தநிலை தமிழ்நாட்டில் காணப்பெறவில்லை. தொறுப்பூசல் நடுகற்கள் முற்காலத்தைச் சேர்ந்தவை அவற்றில் தொறுகோள், தொறுகொளல், தொறுகொண்டு, தொறுகிரஹண ஆகிய சொற்கள் மாடுபிடித்தலைக் குறிக்கும் சொற்களாகப் பயன்படுத்தப் பெற்றுள்ளன. இது தமிழ் மரபுடன் தொடர்புடையவை. ஊர்ப்பூசல் நடுகற்களும் காலத்தால் முற்பட்டவை.

கருநாடகத்தில் பெண்களைப் பாதுகாக்க இறந்த வீரர்களுக்கு நடுகற்கள் மிகுதியும் நடப்பெற்றுள்ளன. இவை கி.பி. 9-10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவை. அதற்குப்பின் இத்தகைய நடுகற்கள் கிடைக்கப் பெறவில்லை. புலி, பன்றி, சிங்கம் ஆகியவற்றுடன் போரிட்டு மாண்டவர்களுக்கு நடுகல் நடப்பெற்றுள்ளன. புலிச் சண்டையில் மாண்டவர்களுக்கு நடப்பெற்ற நடுகற்கள் இருபதுக்கும் மேல் உள்ளன. வீரனுடன் இறந்த நாய்க்கும் நடுகல் உள்ளது.

நவகண்டம் அளிக்கும் வழக்கம் கருநாடகத்தில் மிகுந்திருந்தது. தலைவனுக்காகப் பூமிக்கடியில் உயிருடன் புதைத்துக் கொள்வதும், தலையை வெட்டிக்கொள்வதும் என்று இருவகையான நிலையில் அவ்வழக்கம் நிலை பெற்றிருந்தது. முதல் வழக்கம் கீழ்குண்டே என்று அழைக்கப்பெற்றது.

கருநாடகத்தில் சமணசமயத்தின் செல்வாக்கு மிகுந்திருந்தமையால் சல்லேகனை, நோற்று உயிர்துறந்தவர்களுக்கு 300 நடுகற்கள் நடப்பெற்றுள்ளன.

கணவனுடன் உயர்நீத்த பெண்களுக்கு நடுகற்கள் நடப்பெற்றன. சதிக்கற்கள் 150 கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. மேலும் அன்புகாட்டும் விலங்குகள், பறவைகள் ஆகியவற்றிற்கும் நடுகல் எடுத்துள்ளனர். பசு, எருமை, கிளி ஆகியவற்றிற்கு நடுகல் நட்டுள்ளனர்.

கருநாடக நடுகற்களில் நாட்டார் வழக்காறு பெருமைபடுத்தப் பெற்றுள்ளது. வீரசுவர்க்கம் என்ற கோட்பாடு கருநாடகத்தில் பெருமை பெற்று விளங்கியது. கருநாடக நடுகற்களில் 300-க்கும் மேற்பட்ட கல்தச்சர்களின் பெயர்களும் பொறிக்கப்பெற்றுள்ளன. இந்த வழக்கம் தமிழகத்தில் இல்லை.

நடுகல் வீரர்களுக்கு நிலக்கொடை அளிக்கும் வழக்கம் கருநாடகத்தில் மிகுதியும் உண்டு. கன்னட நடுகற்களில் மகாராஜா, அரசர், இதண்ணாயக்கர், பெருமானடிகள், நாலர்காவுண்ட, ஊர்காவுண்ட ஆகிய படிமுறை அமைக்கப்பெற்றுள்ளது.

**ஆந்திராவில் நடுகற்கள்**

ஆந்திரத்தில் கி.பி. 2-3 ஆம் நூற்றாண்டு நடுகற்கள்தான் காலத்தால் முற்பட்டவை. இவை நாகர்ஜுனகொண்டாவில் நடப்பெற்றவை. இவை இக்ஷ்வாகு மன்னர்கள் காலத்தவை. இதே காலத்தைச் சேர்ந்த நடுகல் ஒன்று அமராவதிக்கருகில் கண்டுபிடிக்கப் பெற்றது. அது போரில் மாண்டவனுக்கு நடப்பெற்றது. ஆந்திர மாநிலத்தில் மேற்கு மாவட்டங்களான வாரங்கல், மெகபூப்நகர், கர்நூல், கடப்பா, அனந்தபூர், சித்தூர் ஆகிய மாவட்டங்களில் நடுகல் கல்வெட்டுகள் மிகுதியும் உள்ளன. சுமார் 500 நடுகற்கள் கண்டுபிடிக்கப் பெற்றுள்ளன. இவற்றில் 380 நடுகற்கள் முல்லை நிலத்தில் நடப்பெற்றவை. காலத்தால் முற்பட்ட (கி.பி. 10 ஆம் நூற்றாண்டு வரை) நடுகற்கள் 262 நடுகற்கள் நடப்பெற்றுள்ளன. புங்கனூர், மதனபள்ளி ஆகிய வட்டங்களில் (சித்தூர் மாவட்டம்) நடப்பெற்ற நடுகற்கள் நிரைகவர்தல் - மீட்டல் ஆகியவற்றுடன் தொடர்புடையவை. போரில் மாண்டவர்களுக்கு எடுக்கப்பெற்ற நடுகற்கள் அடுத்த நிலையில் உள்ளன. அன்பு காட்டும் விலங்குகளுக்கு நடுகல் நடப்பெற்றன. வீரர்களை வீரகுலமு விரலு என்று பெருமையுடன் கூறுகின்றன. ஆந்திரத்திலும் இரத்த உறவு கொண்டவர்களே நடுகல்லை நட்டுள்ளமை தெரிகிறது. நவகண்ட நடுகற்கள் ஆந்திரத்தில் மிகுதியும் உண்டு.

**தமிழ்நாடு**

தென்னிந்தியா முழுவதும் நடுகல் வழிபாடு மிகுந்து காணப்பட்டாலும் குறிப்பிட்ட பகுதிகளில் மட்டும் அவ்வழிபாட்டின் செல்வாக்கு மிகுதியாகக் காணப்பட்டது. பல்லவர் ஆட்சியின் முன்னூறு ஆண்டுகால இடைவெளியில் பல போர்கள் நிகழ்ந்தன. மகேந்திரன் புலிகேசி போர், மாமல்லனின்

வாதாபிப் போர், பரமேஸ்வரவர்மனின் பெருவளநல்லூர் போர், இரண்டாம் நந்திவர்மன் அரியணைப்போர் போன்ற போர்கள் பல்லவராட்சியில் நடைபெற்றன. சில நேரங்களில் கங்கர்களுக்கும் பல்லவர்களுக்குமிடையில் மோதல் நிகழ்ந்தது. கூரம் செப்பேட்டில் வரும் வருணணை, போர்களில் நிகழ்ந்த அழிவை விளக்கமாகக் காட்டுகிறது. அத்தகைய அரசியல் போர்களில் இறந்த ஆயிரக்கணக்கான வீரர்களில் ஒருவருக்குக் கூட நடுகல் நட்டதற்கான சான்றுகள் கிடைக்கவில்லை. இது ஒரு முரண்பட்ட தன்மை. பல்லவர்களின், பெரும்போர்களில் பலர் இறந்துபட்ட அதேகாலத்தில் செங்கம்-தர்மபுரிப் பகுதியில் வாழ்ந்த மக்கள், ஊர்க்கொலை, ஆகோள் ஆகியவற்றில் இறந்த 'வீரர்' களுக்கு நடுகல் நட்டு வழிபாடு செய்தனர். நடுகல் வழக்கம் பாலை (முல்லை, குறிஞ்சி) நிலத்தில் தோன்றி நீண்டகாலம் செல்வாக்குடன் நிலைபெற்றது. பிற பகுதிகளில் நடுகல் (பட்டினபாலை) பற்றிய குறிப்புகள் இருப்பினும் அங்கு செல்வாக்குப் பெற்றிருக்கவில்லை என்று கொள்வதில் தவறில்லை. பல்லவர் ஆட்சியில் நடுகல் கல்வெட்டுக்கள் மிகுந்திருந்த போதிலும் அவர்கள் ஆட்சிக்குட்பட்ட செங்கம், தருமபுரிப் பகுதியில் மட்டும் கிடைப்பது குறிப்பிடத்தக்க போக்காகும்.

**முல்லையும் நடுகல்லும்**

பல்லவர் காலத்திற்கு முற்பட்ட தமிழகத்தில் நடுகல் வழிபாடு சிறப்புற்றிருந்தமையைச் சங்க இலக்கியம் மற்றும் தொல்லியல் சான்றுகள் வழி அறியலாம். அகம், புறம் ஐங்குறுநூறு போன்ற நூல்கள் 'நாணுடை' மறவர்களுக்கு நடப்பட்ட நடுகற்கள் பற்றி விவரிக்கின்றன. அகத்தில் பாலைத்திணைப் பாடல்களும் புறத்தில் வெட்சி, கரந்தைப் பாடல்களும் நடுகல் பற்றி விவரிக்கின்றன. இப்பாடல் அனைத்திற்கும் கொடுமுடி போல் அமைந்திருப்பது புறம் 335-ம் செய்யுள் அச்செய்யுளின் இறுதி அடிகள் நடுகல் வழிபாட்டின் பன்முகத்தன்மையைக் காட்டுகின்றன.

ஒன்னாத் தெவ்வர் முன்னின்று விலங்கி
ஒளிறே ந்து மருப்பிற் களிறெறிந்து வீழ்ந்தெனக்
கல்லே பரவி னல்லது
நெல்லு குத்துப்பரவுங் கடவுளு மிலவே

மேலும் இப்பாடல் முல்லைத்திணையின் கருப்பொருளைத் தொகுத்துக் கூறுகின்றது. அதனால் 'நாணுடை' மறவர்களும், எயினர்களும் முல்லை நிலத்தினர் என்று கருதவேண்டியுள்ளது. வெட்சித்திணையிலும் மூதின்முல்லைத் துறையிலும் அமைந்துள்ள இச்செய்யுள் முல்லைத் திணைக்குரியது என்று சிலரால் கொள்ளப்படுகின்றது. ஒருவகையில் இக்கருத்து ஏற்புடையதாகும். பாடலில் களிறெறிந்து பட்ட வீரர்களுக்குக் கல் நடப்பட்டது என்று இங்கு குறிப்பிடத்தக்கது கோவலர்கள் நடுகல்லினை வழிபட்டனர் என்பது நடுகல்லுக்கும் முல்லைக்கும் இடையிலான தொடர்பினை எடுத்துக்காட்டும். மாடுபிடி சண்டையில் தம்புகழ் நிறுத்தி மாய்ந்த மறவர்கள் குடியை 'முதில்' என்று கூறுவது மறவர்களின் பெருமையையும் பழமையையும் காட்டுகிறது.

தமிழகம் முழுவதும் கண்டுபிடிக்கப்பட்ட பெருங்கற்சின்னங்கள் இறந்தோர்க்கு உருவாக்கப்பட்ட நினைவுச் சின்னங்கள். இவற்றில் தாழிகள், போர்க் கருவிகள், வாள், வேல், அம்புகள் போன்றவை கண்டறியப்பட்டு உள்ளன. ஆகையால் போருக்கும், ஈமச்சின்னகருவிகளுக்குமிடையிலான தொடர்பினை வலியுறுத்த வேண்டியதில்லை. மேலும் சில ஈமச் சின்னங்களில் எருமை, மாடு போன்ற உருவங்களும் கண்டறியப்பட்டு உள்ளன. சில பெருங்கற்சின்னங்களில் குத்துக்கல் நடப்பட்டுள்ளதைக் காணமுடியும். அகப்பாடல்களில் நெடுங்கல் என்றும் 'நட்டபோலும் நடா நெடுங்கல்' என்றும் கூறுவது இந்தக் குத்துக்கற்களைக் குறிப்பதாகலாம் கொடுமணல், பாசூர், கொங்கம்பாளையம் போன்ற ஊர்களில் குத்துக்கல் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. மேலும் வடஆர்க்காடு மாவட்டம் மேட்டுப் புத்தூர், தென்னார்க்காடு மாவட்டம், உடையாநத்தம் போன்ற ஊர்களில் கண்டுபிடிக்கப்பட்ட உருவங்கள் தலையற்ற 'முண்டங்கள்' போலத் தோன்றுகின்றன. இவை பெருங்கற்சின்னங்களிலேயே வைக்கப்பட்டுள்ளன. இவை நவகண்டம் அளித்த வீரர்களுக்காக நடப்பட்ட கற்களாகலாம். இந்தக் கற்கள் கிடைக்கும் பகுதிகளில்தான் நடுகற்கள் மிகுதியாக நடப்பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது. குத்துக்கல் நடும் வழக்கம் ஏற்பட்டபின் பெருங்கற்சின்னங்கள் ஏற்படுத்தும் வழக்கம் குறைந்து நடுகல் நடும் வழக்கும் மிகுந்தது என்று கருதப்படுகிறது. பெருங்கற்சின்னங்கள் வைக்கும் வழக்கம் மிகுந்தது என்று கருதப்படுகின்றது. பெருங்கற்சின்னங்கள் வைக்கம் வழக்கம் கி.பி. ஐந்தாம் நூற்றாண்டு வரை நிலைத்திருந்தது. அதற்குப்பின் அவ்வழக்கம் மறைந்து எழுத்துடை நடுகற்கள் நடப்பட்டன.

### பழங்குடி வழிபாடு

நடுகல் வழிபாடு பழங்குடியினரின் ஆவி வழிபாட்டிலிருந்து தோன்றியது. குடியிலுள்ள ஒருவன் இறந்துவிட்டால் அவன் இறந்து விட்டதாகக் கருதுவதில்லை. அவன் உடனிருப்பதாகவே கருதுகின்றனர். ஓரிடத்தில் ஆவியை நிறுத்தும் சக்தி மனிதனுக்கு ஏற்பட்டபின் நிரந்தரமாகக் கல்லில் கொண்டுவந்து நிறுத்த முடியும் என்று நம்பினான். அதனால் மரம், கல் போன்றவற்றில் இறந்தவர் ஆவியைக் கொண்டு வந்து நிறுத்தினர். இந்த நிலை வந்தபின் அக்கல்லிற்கு வழிபாடு செய்தனர். தன் இனக்குழுவில் வாழ்ந்த மனிதன் இறந்த பின்னும் தன்னுடனேயே வாழ்கிறான் என்ற நம்பிக்கையில் பண்டைக்கால மனிதன் இவ்வழிபாட்டினைத் தொடர்ந்தான்.

### நடுகல்லும் பெண்களும்

நடுக்கல்லைப் பெண்கள் வழிபட்டதாகப் புறப்பாடல்கள் கூறும். வேந்தன் வெற்றி பெறவும் வீடு வளம் பெறவும் அவர்கள் நடுகல்லுக்கு வழிபாடு செய்துள்ளனர். மேலும் போரில் இறந்துபட்ட கணவன் நினைவுநாள் கருதியும் பெண் வழிபாடு செய்துள்ளாள். இலக்கிய வழக்கில் நடுகல் வழிபாட்டில் பெண்கள் பங்கு பெறுவது சுட்டப்படுகிறது. இன்று மக்கள் வழக்கில் பெண்கள் நடுகல் வழிபாட்டில் அனுமதிப்பதில்லை. பெண் விலக்கிற்கு நடுகல் சமுதாயத்தின் கால்நடை வளர்ப்பே காரணம் ஆகும்.

கால்நடை வளர்ப்பு சமூகத்தில் பெண் இரண்டாம் நிலையிலேயே வைத்தெண்ணப்படுவாள். நீலகிரிவாழ் தோதர்களிடையே பெண்கள் தோதர் கோவிலுக்குச் சென்று வழிபட அனுமதிக்கப்படுவதில்லை. தொடக்கத்தில் எழுத்தின்றி நடுகல் வைத்துப் பழகினர். பின்னர் ஓவியம் உருவானது. பின்னர் எழுத்து அறிமுகப்படுத்தப்பட்டது.

## நடுகல்பண்பாட்டில் கால்நடை

கால்நடை வளர்ப்பினை வாழ்க்கையின் உயிர்நாடியாகக் கொண்டு வாழ்ந்த நடுகல் பண்பாட்டினரின் வாழ்வில் மாடு பெற்றிருந்த செல்வாக்கினை அறிவது முதலில் வேண்டப்படுவதாகும். ஆப்பிரிக்கப் பழங்குடிகள், வேதகால மக்கள், செங்கம்-தருமபுரி தொறுவாளர் ஆகியோயுரிமையில் பூசல் பற்றிக் காணப்படும் ஒற்றுமைக்குக் காரணம் கால்நடை மேய்ப்பே ஆகும். கால்நடை மேய்ப்புத் தனிப்பெருந்தொழிலாக எங்கெங்கு உள்ளதோ அங்கெல்லாம் படையியங்கு அரவமும் நடுகல் வழிபாடும் வாழ்வின் அங்கமாக அமைந்துள்ளன. ஆகையால் 'காலதேசங்களில்' வேறுபட்டிருந்தாலும் கால்நடை மேய்ப்பர்களின் பண்பாடு ஒரு தன்மையதாய் உள்ளது எனலாம்.

செங்கம்-தருமபுரிப் பகுதியில் நடப்பட்டுள்ள நடுகற் கல்வெட்டுக்களில் தொறுப்பூசல் பற்றியே மிகுதியாகச் சுட்டப்படுகின்றது. நடுகற்களில் தொண்ணூறு விழுக்காடு தொறுப்பூசல் பற்றியவை. காரணம் சுட்டாத நடுகல்லும் கூட தொறுப்பூசலுக்காகவே நடப்பட்டிருக்க வேண்டும். கருநாடகத்திலும் தொறுப்பூசல் பற்றியே மிகுதியான நடுகற்கள் நடப்பட்டுள்ளன. தமிழகத்தில் கி.பி.பத்தாம் நூற்றாண்டு வரை தொறுப்பூசல் மிக்கிருந்தது. ஆனால் கருநாடகத்தில் கி.பி.பதினான்காம் நூற்றாண்டு வரை தொறுப்பூசல் மிகுதி. கி.பி.பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னர்தான் தொறுப்பூசல் அங்கு மிகுந்து காணப்படுகின்றது. ஆந்திர மாநிலத்திலும் தொறுப்பூசல் பற்றிய நடுகல்லே மிகுதியாக உள்ளது. கருநாடகத்தில் கி.பி.பத்தாம் நூற்றாண்டிற்குப் பின்னும் தொறுப்பூசல் மிகுந்திருப்பதற்குக் காரணம் கால்நடை வளர்ப்பு மிகுந்திருந்தமையேயாகும். ஆனால் தருமபுரி-செங்கம் பகுதியில் பத்தாம் நூற்றாண்டிற்குப் பின் வேளாண்மை மிக்கிருந்தது. தமிழ் இலக்கியத்தில் நடுகல் பற்றிக் கூறும் பாடல்கள் கரந்தைத் திணை பற்றியே மிகுதியாகப் பேசுகின்றன. வெட்சித்திணை பற்றிய பாடல்கள் குறைவாகவே கிடைக்கின்றன. அதற்குக் காரணம் பாடல் தொகுக்கப்பட்ட போது நிரைகோள் களவு என்ற கருத்து உருவாகியிருக்க வேண்டும். அல்லது பாடலைத் தொகுத்தவர்கள் கரந்தைத் திணையை மிகுத்துக் கூறினாலும் கிடைக்கின்ற நடுகற்கள் அக்கோட்பாட்டிற்கு மாறாக உள்ளன. கரந்தை வீரர்களுக்கே மிகுதியாக நடுகற்கள் கிடைக்கின்றன என்ற கருத்து நிலவுகின்றது. தொறு கொண்ட ஞான்று, தொறு மீட்ட ஞான்று என்ற வாசகங்களைக் கொண்டு வெட்சி கரந்தை என்று பிரித்துப் பார்க்கின்றனர் 'ஊர் எறிந்து பட்டான்' என்று கூறும் நடுகற்கள் வஞ்சித்திணைக்குரியவை என்றும் கூறுவர். உண்மையில் ஊர் எறிதல் கூட வெட்சித்திணையில்தான் அடங்கும். தொல்காப்பியர் கூறும் ஊர்க்கொலை,

ஊர் எறிதலைக் குறித்தது எனலாம். வெறுமனே பூசலுட் சென்று பட்டார் என்பதும் தொறுப்பூசலையே நினைவு படுத்துகின்றன.

செங்கம் பகுதியில் வெட்சி நடுகற்களும், கரந்தை நடுகற்களும் சம அளவில் கிடைக்கின்றன. ஆனால் தருமபுரிப் பகுதியில் வெட்சித்திணை நடுகற்களே மிகுதியாகக் கிடைக்கின்றன. நடுகல் எண்ணிக்கையைக் கொண்டு குறிப்பிட்ட திணை மட்டும் போற்றப் பெற்றது என்று கருதமுடியாது. காரணம் அத்திணை நடுகல் வீரர்கள் பூசலில் மிகுதியாக மாண்டிருக்கலாம். இன்னொரு செய்தியும் இங்கு கருத்தில் கொள்ள வேண்டும். தொறு கவரும் மறவர் ஊர்களில் வாழ்பவர் சில நேரங்களில் தொறு மீட்டுள்ளனர். அதனால் தொறு கவர்ந்தவர் குறிப்பிட்ட இனத்தினர் என்றோ திருடர் என்றோ கூறுவது உண்மை நிலைக்கு மாறானது. கவர்தலும் மீட்டலும் எல்லா ஊர்களிலும் நடந்துள்ளன. மேலும் சில நடுகற்கள் குறிப்பிட்ட அரசனின் (குறுநில மன்னர்) ஆட்சிக்குட்பட்டிருந்த ஊர்களைச் சேர்ந்தவர்களே வெட்சி, கரந்தைப் போரில் ஈடுபட்டனர் என்று கூறலாம். நடுகல் கல்வெட்டுக்கள் அதிகமாகக் காணப்படும் பகுதிகளில் அக்காலத்தில் அரசியல் குழப்பம் மிகுந்திருந்தது என்பதையே அவை காட்டுகின்றன என்று பொதுவாகக் கருதப்படுகிறது. ஊர்களுக்கிடையில் சண்டையும் குலங்களுக்கிடையில் சண்டையும் காணப்படுகின்றது.

பல்லவர் காலத்து நடுகற்செய்திகளைத் தொகுத்துப் பார்க்கும் போது மாட்டு மந்தைகள் குறிப்பிட்ட பகுதியைச் சேர்ந்த குறிப்பிட்ட குலத்தினருக்கு உரியவை என்பது புலப்படும். இக்குலங்கள் குறிப்பிட்ட வேளிர் தலைவனுக்குத் கீழிருந்த போதிலும் மாட்டு மந்தைகளையும் தங்கள் மேய்ச்சல் நிலத்தையும் பாதுகாத்துக் கொள்வதற்காக முட்டி மோதின. இந்த மோதல்கள் சங்க இலக்கியத்தில் இடைப்பிறவரலாகக் கூறப்பட்டாலும் குலங்கள் பற்றி விரிவான செய்திகளோ, சிறு குறிப்புக்களோ காணப்படவில்லை. இங்கு நடந்த மாடுபிடி சண்டையில் ஈடுபட்ட குலங்களைப் பற்றிய செய்திகளைக் கொண்டு அறிந்துகொள்ள முடிகிறது. இந்தக் குடிகள் ஆநிரையைத் தமதாக்கிக் கொள்ள முயன்றமையால் பூசல் நிகழ்ந்தன. பூசல்கள் பற்றிச் சுட்டுகின்ற நடுகற்கல்வெட்டுகளில் வீரர் பெயர்கள் அவர்தம் குலப்பெயர்களுடன் சுட்டுவதைக் காண்கிறோம். இந்தக் குலங்களுக்கும் சிற்றரசர்களுக்கும் (வேளிர்) இடையில் நிலைபெற்றிருந்த உறவு பற்றி அறிந்த கொள்ள சிறு சிறு செய்திகளே கிடைக்கின்றன.

**நடுகல் காட்டும் குலங்கள்**

**அரைசர்**

பெரும்பாணர், வாணர், கங்கர், கொங்கணி, பிரிதி கங்கர் போன்ற அரச குலப்பெயர்கள் 'அரைசர்' என்ற பட்டத்துடன் நடுகற்களில் குறிப்பிடப்படுகிறது. தண்டம்பட்டு நடுகல் கல்வெட்டு 'ஈசைபெரும் பாணரைசரு' என்றும் கூறும். மற்றொரு கல்வெட்டு 'ஊர் அரைசரு பெரும்பாணதியரைசரு' என்றும் கூறுவதைக் காண்கிறோம். 'பெரும்பாண முத்தரைசர்' 'பெரும்பாண இளவரைசர்' 'வேசாலிப்பேரரைசர்',

‘வாணபருமரைசர்’, கங்கபருமரைசர்’, ‘அரிமறைபருமர்’ போன்ற பெயர்கள் கூறுப்படுகின்றன. ‘பாலாசிரியர்’, ‘பாரதாயர்’ பராம தாயர்’, அமரடக்கியார், காட்டிறைகள், ‘கங்க விசைய ஏனாதியர்’ போன்ற பெயர்களும் எடுத்துக்காட்டத்தக்கன.

இப்பெயர்களில் ‘அரைசர்’, ‘அரையர்’, ‘தாயர்’, ‘திறையர்’, ‘இறையர்’, ‘அந்தை’, ‘பருமரைசர்’ போன்ற விகுதிகள் ஆளப்பட்டுள்ளன. ‘அரைசர்’ என்பது வடமொழி ‘ராஜா’ என்பதன் திரிந்த வடிவம். ‘ஆதிராஜா’ என்பதன் திரிந்த வடிவம் ‘அதியரைசர்’ என்பர். வேள்விக்குடிச் செப்பேட்டில் ‘அளவரிய’ அதிராசரை’ என்று கூறப்படுகின்றது. ‘அரைசர்’ என்பது தமிழ் மரபில் வந்த பெயர் என்று ஒரு சாரார் கூறுகின்றனர். ஆனால் ‘ராஜா’ என்ற சொல்லுக்கும் ‘வேள்’ என்ற சொல்லுக்குமிடையில் பொருள் ஒற்றுமை உள்ளது. ‘அரசன்’ (ராஜா) ஒருமை என்றால் ‘அரைசர்’ பன்மை. ‘பெரும்பாணரைசர்’ என்பது பாணர் குலவேளிர்களைக் குறித்து வந்தது.

இருளப்பட்டி நடுகல்லில் ‘பருமரைசர்’ என்று கூறுவது குறிப்பிடத்தக்கது. பருமர் என்பது ‘வர்மன்’ என்பதன் தமிழ் வடிவம். வர்மர், அரைசர் என்பவர்க்கும் மேல் இருப்பவர். பெரும்பாலும் ‘வேந்தன்’ என்பதற்குச் சரியாகக் கூறப்படும் வடமொழிச் சொல் எனலாம். பல்லவ மன்னன் ஒருவனைத் ‘தொண்டையந் தார்வேந்தன்’ என்று கூறுவதிலிருந்து இது விளங்கும். ஆகையால் ‘வர்மன்’ என்பதுடன் அரசன் என்பது சேர்ந்து ‘வருமரசன்’ (பருமரைசரு) வந்துள்ளது எனலாம். கி.பி. நான்காம் நூற்றாண்டில் வடமொழியைப் பயன்படுத்தும் போது சரியான விளக்கமின்றிப் பயன்படுத்தியுள்ளனர் என்பதையே இது விளக்குகின்றது. அதிகாரப்படி நிலையில் ‘வர்மன்’ அரசரினும் உயர்ந்தவன் என்பதையும், சத்திரிய மரபினன் என்பதையும் காட்டவே ‘வர்மன்’ என்ற பெயர் கூறப்படுகிறது.

**முத்தரைசர் - இளவரைசர்**

முத்தரைசர், இளவரைசர் என்ற இரு துணைப் பெயர்கள் நடுகற்களில் வருகின்றன. இவற்றில் முத்தரைசர் என்பது முத்தரையர் பரம்பரையைக் குறித்து வந்தது என்று கருதப்படுகிறது. உண்மையில் இச்சொல் ஒரு குலத்திலேயே மூத்த பிரிவினர் என்பதைக் குறித்து வந்தது. பெரும்பாண முத்தரைசர், பெரும்பாண இளவரைசர் என்று கூறுவதிலிருந்து இது உறுதிப்படுகின்றது. முத்தரையர் என்ற குலத்திற்கும் பெரும்பாண முத்தரைசர்க்கும் தொடர்பேதுமில்லை. மேலும் வாணகோவரையர் பரம்பரையில் ‘வாணகோ முத்தரைசர்’ என்றும் ‘வாணகோ இளவரைசர்’ என்றும் கூறப்படும் இரு பிரிவுகள் இதனை வலியுறுத்தும். இளவரைசர் என்பது ஒரே குலத்தில் இளைய பிரிவினைக் குறித்து வந்தது எனலாம்.

**பாரதாயர்**

செங்கம் பகுதி ஆனந்தவாடிக் கல்வெட்டில் ‘பாரததாயர்’ என்ற பெயரும் தருமபுரிப் பகுதியில் கூக்குடப்பட்டி என்ற ஊரில் உள்ள கல்வெட்டில் ‘பாராதாயர்’ என்ற பெயரும் கூறப்படுகின்றது. இச்சொற்கள்

வடமொழி பாரத்துவாஜ் (கோத்திரம்) என்பதன் திரிபு என்பர். உண்மையில் இச்சொல் பழந்தமிழிலிருந்து இரண்டு சொற்களால் உருவான சொல் என்று கூறலாம். பாரம்-தாயர் என்று பிரித்துப் பொருள் கொண்டால் உண்மைப் பொருளை விளங்கிக் கொள்ளமுடியும். பாரம் என்பது பெருங் குடும்பத்தையும் கரை ஓரப்பகுதியையும் குறித்து வந்தது. இவற்றில் கரை ஓரப்பகுதி என்று கூறுவது சிறப்புடையது. இங்கு தென்பெண்ணை ஆற்றங்கரையில் உள்ள இரு கரையிலும் இக்கல்வெட்டுகள் கிடைக்கின்றன. ஆகையால் கரை ஓரப்பகுதியை ஆளும் உரிமை (தாயர்) பெற்றவர்கள் என்ற பொருளை இச்சொல் வழங்கியிருக்கலாம்.

**காமிண்டர்**

தருமபுரி பகுதியில் கிடைக்கும் நடுகற்களில் 'காமிண்டன்', என்ற சொல் பயின்று வரக் காண்கிறோம். இச்சொல் கி.பி. பத்தாம் நூற்றாண்டு முதல் வழக்கத்தில் உள்ளது. ஆனால் கருநாடகத்தில் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதலே வழக்கத்தில் உள்ளது. இச்சொல் ஒரு குறிப்பிட்ட சமூக நிலையில் உருவான சொல். ஆனால் அச்சமூகத்தில் பல்வேறு மாற்றங்கள் ஏற்பட்ட பின் இச்சொல் 'தலைவன்' என்ற பொருளைத் தந்தது. தலைவன் என்ற பொருள் உருவான பின்பே இச்சொல் தமிழ்நாட்டில் பயன்பட்டிருக்க வேண்டும். கா-மிண்டன் என்று பிரித்துப் பொருள் கூறலாம். 'கா' என்பது பார்க்கும் தொழிலைக் குறித்து வந்தது. 'மிண்டன்' என்பது வலிமையானவன் தலைவன் என்று பொருள்படும். இதனால் காமிண்டன் என்பது காக்கும் தொழிலுடைய தலைவன், வலிமையானவன் என்ற பொருளைத் தந்தது எனலாம்.

**மக்கள்**

மக்கள் என்பது மகன் என்பதன் பன்மையாகவும், மருமக்கள் என்பது மருமகன் என்பதன் பன்மையாகவும் கொள்ளலாம். சில கல்வெட்டுக்களில் 'மகன்' என்றும் பயின்று வருகின்றது. 'மகன்' என்ற சொல்லும் தற்காலத்தில் கூறப்படும் 'தந்தைக்கு மகன்' என்ற பொருள்படுத்தப்படுகின்றது. நடுகற்களில் இச்சொற்கள் தலைவன், வீரன், ஆண், முதலிய பொருள்களில் பயின்று வருகின்றன. மகன் என்பதற்கு மூலத் திராவிடத்தில் தலைவன், மனிதன், ஆண், வீரர், என்ற பொருளிலே வழங்குவது இங்குக் குறிப்பிடத்தக்கது.

நடுகல் கல்வெட்டுகளில் பயின்று வரும் 'மக்கள்' என்பது பெரும்பாணரைசர் கீழிருந்த ஒரு பகுதியின் அல்லது ஓர் ஊரின் தலைவர்கள் என்று கொள்வதில் தவறில்லை. பெரும்பாணரைசர் மக்கள் என்று கூறுவது பெரும்பாணர் குலத்தின் தலைவர் என்று கொள்ள வேண்டிவரும். பொன்மாந்தனாரை வாணகோமுத்தரைசர்க்கு குலமுதல்வோன் என்று கொள்வது எடுத்துக்காட்டத்தக்கது, ஆனால் இப்பொருள் ஆய்வுக்குரியது.

'மருமக்கள்' என்பதற்கு வேறு வகையிலும் பொருள் கொள்ளலாம். தமிழில் 'மரு' என்பதற்கு மலை என்றும் மருநிறம் என்பதற்கு 'நீர்' நிழலுற்ற நிலம் என்றும் பொருள் கொள்ளப்படுகிறது. மருநிலம் என்பது பாலை

நிலத்தினைக் குறித்து வந்தது என்று கருதவேண்டியுள்ளது. நடுகல் பகுதியில் மலையும் பாலையும் நிலைத்திருந்தது. ஆகையால் 'மருமக்கள்' என்ற சொல் பெரும்பாலும் மலையரையர்களையோ பாலைத் தலைவர்களையோ குறித்து வந்தது ஆகலாம். 'மக்கள்' என்பதும் 'மருமக்கள்' என்பதும் வீரன், தலைவன் என்ற பொருளிலேயே வழங்கியிருக்க வேண்டும். உறவுமுறைச் சொல்லாக அவை பயன்படவில்லை என்றே கருத வேண்டியுள்ளது.

**நாடு**

'நாடு என்பது முதன்முதலில் குறிஞ்சி நிலத்தில் உள்ள மக்கள் வாழ்விடத்தைக் குறித்து வந்தது. பொய்கையார் சேரமான் கோக்கோதை மார்பனைப் பாடும்போது 'குறிஞ்சி நிலமுடைமையால் உன்னை நாடன் என்று கூறுவேனா? மருதநிலம் உடைமையால் ஊரன் என்று கூறுவேனா? நெய்தல் பெற்றிருப்பதால் உன்னைச் சேர்ப்பன் என்று கூறுவேனா? என்று கூறுவர்.

செங்கம் - தருமபுரிப் பகுதியில் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் நாட்டுப் பிரிவுகள் கூறப்படுகின்றன. மீவேணாடு கீழ்வேணாடு, மீகுன்றை நாடு, புறமலை நாடு, கங்கநாடு, கோவூர் நாடு போன்ற நாட்டுப் பிரிவுகள் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதலே கூறப்படுகின்றன. வேள்கலி நாடு கோயினூர் நாடு, தாயனூர் நாடு, எயில்நாடு, பங்களநாடு, சிறுபாழ்நாடு போன்ற பெயர்கள் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதல் நடுகல் கல்வெட்டுகளில் கூறப்படுகின்றன. புதுப்பிரிவுகள் தேவை கருதி பின்னாளில் உருவாக்கப்பட்டவை. இவை மக்கள் நெருக்கம் மிகுதியானமையால் உருவான பிரிவுகள். இப்பிரிவும் பெயர்களும் பண்டை ஊர்களைச் சுற்றியிருந்த பகுதிகளைச் சுட்டிநின்றன. கி.பி. ஆறாம் நூற்றாண்டில் 'சிறுபாழ்' என்றொரு ஊர் கூறப்படுகின்றது. சிறுபாழ்நாடு என்ற பிரிவு கி.பி. ஒன்பது பத்தாம் நூற்றாண்டு நடுகற்களில் சுட்டப்படுகின்றது. கி.பி. ஏழாம் நூற்றாண்டுக் கல்வெட்டில் 'கோஇல்' என்றொரு ஊர் கூறப்படுகின்றது. கோயினூர் நாடு என்ற பெயர் கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டுக் கல்வெட்டில் கூறப்படுகிறது. ஆகையால் புதுப்புது நாட்டுப் பிரிவுகள் பண்டைய ஊர்களை மையமாக வைத்தே உருவாக்கப்பட்டன என்று கருதலாம்.

நடுகல் கல்வெட்டுக்களில் கூறப்படும் நாட்டுப்பிரிவுகள் குடிப்பெயர் களையும் இயற்கையமைப்பினையும் அடிப்படையாகக் கொண்டு பெயரிடப்பட்டுள்ளன. வேணாடு, வேள்கலிநாடு, கங்கநாடு, எயில்நாடு போன்ற பெயர்கள் பண்டைய குடிப்பெயர்களால் வந்த பெயர்கள் மீகுன்றை (மீகொன்றை) நாடு, புறமலைநாடு போன்ற பெயர்கள் இயற்கை அமைப்பின் அடியாக எழுந்த பெயர்கள். சில நாட்டுப் பிரிவுகள் பல்லவர்கள் வருகைக்கு முன்பே உருவாகியிருக்க வேண்டும். பல்லவர்கள் வந்தபின் சில நாட்டுப் பிரிவுகள் உருவாகியிருக்க வேண்டும்.

**கன்னட மரபு**

செங்கம் பகுதியில் கிடைக்கின்ற கல்வெட்டு ஒன்று 'வேண்ணாடைந் நூறு' 'எயில்நாடு முன்னூறு' என்று நாட்டுப் பெயரைச் சுட்டுகின்றன.

'கோவூர் நாடைந்தூறு' என்று செல்லப்பட்டி நடுகல் கூறும். நாடு, பாடி ஆகிய பிரிவுகளைச் சுட்டும்போது எண் கூறும் மரபு கருநாடகத்தில் உண்டு 'க்ங்கவாடி 96000', 'இரட்டபாடி 7,50,000', பணவாசி 12,000, 'நுளம்பாடி 32000', 'தொண்டைமண்டலம் 48,000 போன்ற பெயர்கள் கருநாடகக் கல்வெட்டுக்களில் பயின்று வருகின்றன. ஊர்களைச் சுட்டும் போதும் எண் தரப்படுவதைக் காணலாம். 'தேவலிகை 71' என்று கூறுவதை எடுத்துக் காட்டலாம். தமிழ்நாட்டில் இது போன்ற செய்திகள் இடைப்பிறவரலாக வருகின்றன. வடுகவழி 12,000, மிலாடு 2000 போன்றவற்றைச் சான்றாகக் காட்டலாம். கருநாடகத்தில் கி.பி. 3ஆம் நூற்றாண்டிலேயே இந்த மரபு தோன்றிவிட்டதாகக் கூறுவர். தமிழ்நாட்டில் ஒன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் குடியிருப்பு எண்ணிக்கையைச் சுட்டுவது என்றும் பேரெண்கள் வாய்ப்பாடு வகைப்பட்ட தென்றும் கூறுவர் ஆனால் ரைஸ் என்பார் பேரெண்கள் '1000' என்பது ஒரு நாட்டைக் குறித்து வந்ததென்பார். ஆனால் பர்ட்டன் ஸ்டீன் அவர்கள் இவ்வெண் குடும்புகளைக் குறித்து வந்தது என்பர். குடும்புகளின் எண்ணிக்கையைக் குறித்து வந்ததாயின் வேண்ணாட்டில் ஐந்நூறு குடும்பங்கள் இருந்தன என்று கொள்ளலாம். ஆனால் இது பொருந்தி வரவில்லை.

**நாடு - அரைசர்**

பல்லவர்காலத் தொடக்க முதல் நாட்டுப் பிரிவுகள் இருந்த போதிலும் நாட்டார் சபை அங்கில்லை. ஒவ்வொரு நாட்டிற்கும் ஒரு தலைவன் ஆட்சியே நிலைபெற்றது. வேணாடு, பெரும்பாணரைசர் ஆட்சியிலும், முகுன்றை நாடு வாணகோவரைசர் ஆட்சியிலும் நிலைபெற்றிருந்தது. சிம்ம விஷ்ணு காலத்திலும் முதல் மகேந்திரவர்மனின் இருபதாம் ஆட்சி ஆண்டு வரையிலும் நடுகற்கல்வெட்டுக்களில் ஊர் ஆளும் தலைவர்கள் பெயர் சுட்டப்படுகின்றதே ஒழிய நாடாளும் தலைவர் பெயர் காணப்படவில்லை. ஆகையால் ஆட்சி நிருவாகம் தொடக்கத்தில் ஊர் அளவில் இருந்திருக்க வேண்டும் என்று கருதலாம். பின்னாளிலேயே நாட்டிற்குத் தலைமையேற்ற 'அரைசர்கள்' ஆட்சி ஏற்பட்டிருக்க வேண்டும் என்று கருதலாம். பெரும்பாணரைசர் வேணாட்டுப் பகுதியில் பல்லவர்க்கு முன் கூறப்பட்டாலும் பல்லவர் காலத் தொடக்கத்தில் ஊர் ஆட்சியாளர்களாக மட்டும் கூறப்படுவது குறிப்பிடத்தக்கது.

பல்லவர்கள் ஆட்சியேற்பட்டபின் இந்தச் சிற்றரசர்கள் பல்லவர்களின் கீழ் ஆட்சி செய்தனர் என்று கருதலாம். தொண்டை மண்டலத்தின் கிழக்குப் பகுதியில் நாட்டுப் பிரிவுகளில் நாட்டார் ஆட்சி நடைபெற்றது. ஆனால் நடுகல் மிகுந்த மேற்குப் பகுதியில் அரைசர் ஆட்சி நடைபெற அனுமதிக்கப் பெற்றது. இது பல்லவர் ஆட்சியில் நிலைபெற்றிருந்த இரட்டைத் தன்மையைச் சுட்டுகின்றது. இத்தகைய நிலைக்குக் காரணமுண்டு. சங்க காலத்தை அடுத்து இங்கு நிலை பெற்றிருந்த அரசியல் தெளிவற்றதாகவே இருந்தது. கி.பி. பன்னிரண்டாம் நூற்றாண்டு வரை அதியமான்களைப் பற்றி செய்தி ஏதும் கிடைக்கவில்லை. சங்க காலத்திற்குப் பின் இப்பகுதி கங்கர்கள் பாணர்கள் ஆகியோர் கைகளில் சென்றிருக்க வேண்டும். தொடக்கத்தில்

பாணர்களே இப்பகுதியைக் கைப்பற்றியிருக்க வேண்டும். அரூர் வட்டம் பாப்பம்பட்டி நடுகல்லின் அருகிலேயே கி.பி. ஆறாம் நூற்றாண்டு நடுகல் உள்ளது. அந்நடுகல்லில் 'தகடூர் நாடாளும் கங்கரைசரு மேல் வந்த தண்டத்தொரு எறிந்து பட்டாரு வாணபெருமரைசரு' என்று கூறப்படுவதால் வாணர்களைக் கங்கர்கள் வென்று தங்கள் சிற்றரசர்களாக ஆக்கிக் கொண்டனர் எனலாம். பல்லவ சிம்மவிஷ்ணு இப்பகுதியைப் பல்லவ ஆட்சிக்குக்கீழ் கொண்டு வருமுன் பெரும்பாணர்களும் பிற உள்ளூர் மன்னர்களும் ஆண்டனர் என்று கருதலாம். செங்கம் பகுதியில் இந்த நிலையே காணப்படுகின்றது.

**அரசியல்**

நடுகல் பகுதியில் நிலைபெற்றிருந்த அரசியல் வகை மாதிரியைக் கண்டறிவது தேவையான ஒன்று. இப்பகுதியைச் சுற்றிலும் பேரரசுகள் உருவாகி நிலைபெற்றிருந்தன. பல்லவர், கங்கர், சாளுக்கியர், விஷ்ணுகுண்டினர் போன்றவர்கள் அரசினை உருவாக்கி ஆட்சிநடத்தி வந்தனர். இந்தப் பின்னணியில் செங்கம்-தருமபுரிப் பகுதி அரசியல் வேறுவிதமாக விளங்கியது. இங்கு வாழ்ந்த இனக்குழு மக்கள் தனிதனி நிருவாக அமைப்பினைப் பெற்றிருந்தனர். ஒவ்வொரு இனக்குழுவும் தனக்கென நிருவாக அமைப்பினைப் பெற்றிருந்தாலும் நிருவாகம் ஒரே அச்சில் வார்த்தெடுத்தது போல் இருந்தது. இனக்குழுவில் மக்கள் இரத்த உறவில் பிணைக்கப்பட்டிருந்தனர். ஆகையால் நிருவாகம் எளிமையாக இருந்தது.

பர்ட்டன் ஸ்டீன் தென்னிந்திய அரசினைக் 'கூறாக்கநிலை அரசு' என்று கூறுவார். 'மத்திய காலத் தமிழகத்தில் வேளாண் அரசியலும் சமூக வாழ்க்கையும்' என்ற நூலில் தென்னிந்திய அரசு கூறாக்க நிலை அரசு என்று கூறுவார். பர்ட்டன் ஸ்டீன் தென்னிந்திய அரசு பற்றி கூறுவது நடுகல் அரசியலைப் புரிந்து கொள்வதற்குப் பயன்படும். அதனை ஸ்டீன் கூறுகிறார் "அரசியல் அதிகாரமும் கட்டுப்பாடும் பல சீவாதாரமான வழிகளில் வட்டார நிலைப்பட்டதாகவே காணப்பட்ட இடைக்கால இந்திய அரசானது இங்கு ஒரு கூறாக்க நிலை அரசு ஆகக் கொள்ளப்படுகிறது. இந்த அரசானது ஆக்க அலகுகளில் செயல்வீச்சு, நன்கு வரையறுக்கப்பட்ட, நிலையான இனக் குழுமங்கள் வாழும் பிரதேசங்களுக்கு வரையறை செய்யப்பட்டதாகவே இருந்தது. அப்பிரதேசங்களின் பிராதானிகளாக இருந்தோர் பெரும் பான்மையும் அந்த உள்ளூர் வட்டாரத்தில் வாழ்ந்த மேலாதிக்கமுடைய இனக்குழுமங்களின் தலைவர்களாகவோ தலைமைப் பேச்சாளர்களாகவோ தான் இருந்தனர். அத்துடன் தென்னிந்தியாவுக்கே தனிச்சிறப்புத் தருவனாக அமைகின்ற பல்வேறு உள்ளூர்க்குழுக்களின் நலன்களைப் பிரதிநிதித்துவம் செய்வனவாகவிருந்த கூட்டுநிறுவனங்கள் அவ்வட்டாரத்தில் பொது அலுவல்களில் பங்கு கொண்டன."

இது பிரமிட் எனப்படும் கூர்கோபுர முறையில் கூறுகளாக ஆக்கப்பட்டு முழுமைபெற்ற அரசு வகையாகும். இந்த அரசு வகை இப்பெயர்

பெறுவதற்கும் காரணம் அதன் கட்டமைப்பேயாகும். இந்தப் பகுதியில் நிலை பெற்றிருந்த ஆட்சியை பேராசிரியர் எ.சுப்பராயலு வேள் ஆட்சி (Chief dom) என்று கூறுவார். அண்மைக் காலங்களில் வேள் ஆட்சி பற்றி பல ஆய்வுகள் நடந்துள்ளன.

இப்பகுதி நடுகற்கள் சிலவற்றில் அரசியல் நிருவாகம் தெளிவாகச் சுட்டப்படுகின்றது. பருமர், அரைசர், மக்கள், சேவகர் போன்ற அதிகாரப் படிநிலை பயின்று வருகின்றது. இவர்களில் கீழ்நிலையில் உள்ள சேவகர்களே மிகுதியும் பூசலில் மாண்டுள்ளர். மிகுதியும் பூசலில் ஈடுபட்டவர்களும் அவர்களே ஆவர். மக்கள் (தலைவர்) பூசலில் ஈடுபட்டதற்கான குறிப்புகள் சில உண்டு. ஆனால் இறந்தமைக்கான சான்று இல்லை. நடுகல்லில் கூறப்படும் அரசியல் வேளாட்சியைக் குறிக்கின்றதா அல்லது கூறாக்க நிலை அரசு வகையைச் சேர்ந்ததா என்பது ஆய்வுக்குரியது.

இனக்குழு ஆட்சியில் தலைவன் உருவாக வாய்ப்பில்லை. கூறாக்கநிலை அரசு இனக்குழு வாழ்க்கையில் வளர்ந்த நிலையைச் சுட்டுவது. இங்கு இனக்குழு வாழ்க்கையில் அனைத்து அம்சங்களைப் பெற்றிருந்தபோதிலும் கூறாக்கநிலை இனக்குழுவிற்குத் தலைவன் இருப்பான். இந்த தலைவன் இனக்குழுவின் மூத்த மக்களால் நியமிக்கப்படலாம். நிரைகோடலின் போதும் இந்த வகைத் தலைவன் தேர்ந்தெடுக்கப்பட வாய்ப்புண்டு. தலைவன் செயல்பாடுகள் இனக்குழு மரபினால் கட்டுப்படுத்தப்படும். கூறாக்கநிலை அரசு என்பது வளர்ச்சியடைந்த இனக்குழு அரசு என்று கொள்ள வாய்ப்பு உண்டு. இதற்குரிய இயல்புகள் அனைத்தும் செங்கம்-தருமபுரி பகுதியில் காணப்படுகின்றன. இவ்வரசின் அடிப்படைக் கூறுகளான ஊர்கள் நாட்டினை ஆளும் அரசன் இருந்தபோதிலும் ஊர்கள் மாட்டுச் செல்வத்திற்காகப் போரிட்டுக் கொள்வது கூறாக்கநிலையை வலியுறுத்துகின்றது. செங்கம்-தருமபுரிப் பகுதியில் இருந்த குலங்களை ஒரு பெருந்தலைவன் கீழ் கொண்டு வரும் முயற்சி சங்ககாலந்தொட்டு நிலை பெற்றுள்ளது. அதுவே வேளிர் ஆட்சி ஏற்படுவதற்கு வழிகோலிற்று. நடுகல் பகுதியில் பேரரசின் ஆதிக்கமும், கங்கப்பேரரசின் ஆதிக்கமும் மாறி மாறி நிலைபெற்றிருந்தன. வேளிர் ஆட்சிக்கு மேல் பேரரசு என்னும் நிறுவனம் கி.பி. ஆறாம் நூற்றாண்டு முதல் செயல்படத் தொடங்கிவிட்டது. இரண்டு பேரரசின் எல்லைப்புறத்தில் செங்கம்-தருமபுரி பகுதி அமைந்துள்ளது. செங்கம் பகுதி பல்லவப் பேரரசு வீழ்ச்சியடையும் வரை பல்லவர் ஆதிக்கத்திலேயே நிலை பெற்றிருந்தது. ஆனால் செங்கம் தருமபுரிப் பகுதிகளில் இனக்குழு வாழ்க்கை மாற்றமின்றியே இருந்தது.

இந்த நிலையில் சமூகம் பல கூறுகளாகப் பிரிந்து கிடந்தது. அந்தக் கூறுகள் ஒன்றிற்கொன்று முரண்பட்டுக் கொண்டிருந்தன. ஒவ்வொரு குலமும் தங்களுக்கென சிறு படையினையும் அதிகார அமைப்பினையும் பெற்றிருந்தது. நடுகல்லில் பயின்று வரும் 'மக்கள் என்பவர்கள் குல முதல்வர்களாக விளங்கியவர்கள். இவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்களா? அல்லது குலத்தின் பெரியோர்களால் நியமிக்கப்பட்டார்களா? என்பது புலப்படவில்லை. பெரும்பாலும் பெரியோர்களால் நியமிக்கப்பட்டிருக்க

வேண்டும். குலம் ஒப்புக்கொண்ட தலைவர்களாக இருத்தல் வேண்டும். இவர்களுக்குக் கீழிருந்த 'சேவகர்' எனப்பட்டவர்கள் 'வீரர்கள்' என்ற பொருளில் கருதப்பட்டனர். குறிப்பிட்ட ஒரு குலத்தினைச் சேர்ந்தவர்களே இந்த மக்கள் சேவகர்கள். இவர்கள் ஊதியமின்றி குலத்திற்காகப் பூசலிட்டவர்கள் இந்தப் பூசலில் மாண்டவர்கள் குலத்திற்காக எதையும் செய்யத் தயாராய் இருந்தார்கள்.

நடுகல்லில் கூறப்படும் குலங்களில் கூறாக்கநிலை குலங்களின் சில கூறுகள் பயின்று வருகின்றன. அரசியல் அமைப்பு சிறுசிறு கூறுகளாகப் பிரிந்து கிடைக்கும் தன்மையும், ஒவ்வொரு கூறின் அதிகாரம் எல்லைக்குட்பட்டு இருந்த தன்மையும் நடுகல் கல்வெட்டுகளில் பயின்று வருகின்றது. கீழ்நிலையிலும் சுயாட்சி மிக்க கூறுகள் உள்ளன. மீவேணாட்டில் உள்ள வெண்மறுக்கோடு, தாழைஊர் ஆகியவற்றில் முரண்பாடு நிறைந்திருப்பதைப் பின்வரும் கல்வெட்டால் அறியலாம்.

"கோவிசைய நந்திபன்றரையர்க்கு யாண்டு இரண்டாவது
ஊனமிறையார் வேணாடாள வெண்மறுக்கோட்டு
வேட்டுவர் தாழை ஊர் தொறுக் கொண்ட நான்று தாழை
ஊருடைய வண்ணக் கடையாளர்தொறு மிட்டுப்பட்டார்"

ஒரு நாட்டிற்குட்பட்ட இரு கூறுகளுக்கிடையில் 'மாடுபிடி' சண்டையால் முரண்பாடு இருந்து கொண்டேயிருக்கிறது. இவ்விரு கூறுகளும் வேணாடாளும் ஊனமிறையார்க்குப் பெயரளவில் கட்டுப்பட்டு உள்ளன. ஊர்த்தலைவர்களும் மக்களும் மட்டுமின்றி வேளிர்களும் போரிட்டுக் கொண்டதற்கான சான்றுகளும் கிடைக்கின்றன.

நடுகல் வைத்த மக்கள், பழங்குடி வாழ்க்கையில் நீண்ட நாட்கள் நிலைத்து வாழ்ந்தவர்கள். ஆகையால் அந்த வாழ்க்கையில் மனித வாழ்க்கைக்கு அப்பாற்பட்ட மேலுகம் பற்றிய நம்பிக்கையோ, சொர்க்கம் நரகம் பற்றிய நம்பிக்கையோ சிறிதளவும் காணப்படவில்லை. அவர்கள் கண்டதெல்லாம் தெய்வமாகிய மனிதனை மட்டும் தெய்வமாகப் போற்றினார்கள். மிகவும் பிற்காலத்தில் (கி.பி. பத்தாம் நூற்றாண்டு) மேலுலகம் பற்றிய நம்பிக்கை துளிர்த்தது. இக்கருத்து பெருந்தெய்வ வழிபாட்டினருடன் ஏற்பட்ட தொடர்பினால் உருவானது. ஆகையால் நடுகல் மக்களுக்கு இருவேறு உலகம் இருப்பதாகத் தெரிந்திருக்கவில்லை எனலாம். இது பழங்குடித் தன்மையை வலியுறுத்துகின்றது எனலாம்.

# 58. Seppu Tirumenikal*

**V.N. Srinivasa Desikan**, Chennai.

Every country has to its credit a rich and wide variety of cultural heritage, which has been handed down to it from the past. This cultural heritage consists of different categories of architecture, sculpture in different media i.e., stone, metal, clay and wood, paintings and coins. All these speak of the rich and valuable traditions of our past and these stand as testimonies of the lives of the past. The understanding of the forgotten past is made possible by them and what is left unexplained or vague, by one, is explained and made clear by the other.

It is in this context, metal icons of South India, popularly known as South Indian Bronzes reflect the glory of our land. Since copper was mainly used for making these images, the epigraphs of the Cholas refer to them as copper images : **Seppu Tirumenikal** which forms the title of the present lecture.

Tamilnadu is the land of temples, sculptures in stone and metal. Though many countries of the world have had a cultural heritage, Indian cultural heritage and particularly of South India and more specifically Tamil Nadu, is unique and unparallel and uncomparable as for architecture and sculpture are concerned. There is no doubt that Greek and Roman Art stood for perfection, but the achievement of the artisans of Tamil Nadu in creating temple bronzes, represents the religious consciousness of the people. To quote Percy Brown "It is mind materialized in terms of rock, brick, stone or metal". Our temple bronzes are widely known for the artistic workmanship combined with an element of sacredness and sancity, which are in abundance, but they are totally absent in the Western Art. There is more stress on anatomy in the works of Piccasso and others, where our art pieces, emphasis is given to the grace. The image worship has been the key note of the Hindu way of life and so modelling of icons in any media, is based on high traditions and according to the prescribed rules laid down in our ancient texts.

It is against this background, the sculptural art especially the metal icons of Tamil Nadu has to be appreciated. The history of metal art has a hoary past and it is a living art today. This is practiced even today by craftsmen, "who have kept alive the ancient technique both by preserving

---

கோயிலூர் ஆதினம் அறக்கட்டளைச் சொற்பொழிவு, தருமபுரியில் ஆவணம் எண் : 17 வெளியீட்டு விழாவில் நிகழ்த்தியது.

the texts relating to the mode of preparation as also the contemplative hymns or **dhyanaslokas**, which describe the form of individual icons".

The images are cast by the **"cire perdue"** process or lost wax process. **"cire-perdue"** is a composite French term. **'Cire'** means wax, and **'perdue'** means lost. When translated into English the term **'cire-perdue'** would mean "lost wax". It is so called from the fact that the wax model which serves as the core of operation is drained out before the actual casting takes place. This process is common for all types of casting where the wax is replaced by metal. In Sanskrit the term used for this process is **Madhuchchishtavidhanam.**

Our ancient literature both Tamil and Sanskrit speak of casting of images. Early Tamil literature speaks of the numerous sculptures that were fashioned in metal, ivory, wood or stucco. Temples and temple construction were known to the Tamils, long before the advent of the Pallavas. There are references to sculptures, palaces and mansions in Tamil literary works. In Silappadikaram the term koyil is available in the following verse.

அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால் வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும்
மாலை வெண்குடை மன்னவன் கோயிலும்

Incidentally there is a reference to temples for different gods. In the devotional hymns of later periods, the word **Pali** is used to denote a temple. In the **Nalayiradivya Prabandha**, the word **Pali** is used to indicate a temple.

"வானவர் கோன் பாழி" **Iyarpa II, 13**

A commentator on Tiruvaimoli mentions **Ayyampali** in the sense of a temple for Sasta (**Ayyanar**).

Appar in his Tevaram hymns, lists of various types of temples : Perumkoil, Karaikkoil, Nalarkoil etc. Again elsewhere Appar mentions Madakkoyil and Tunganaimadam. Some of the terms have been identified precisely while others still remained unidentified. Of course, the term Tunganaimadam represents the **gajaprista** or apsidal type of temple (e.g. Nakula Sahadeva temple, Mahabalipuram, Siva temple at Kuram).

The above survey clearly indicates the existence of different types of temples, while the Ilamkoyil finds a predominant place as a very popular temple style.

**Padimam, Padivam** etc.

The term sculpture is referred to in Tamil poems as **Padivam** and **Padimam** and made in stucco or wood. In **Silppadikaram** the word **padimam** is used in :

மேலோர் விழையும் நூனெறிமாக்கள்
--- --- --- --- ---
--- --- --- --- ---
கைவினைமுற்றிய தெய்வ படிமத்து

Sittalaisattanar in **Manimakhali** mentions,

அணியிழை யந்தா மாறவெழுத்து
கடிவுயெழுதிய படிமங்காணிய

and

சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும்
மையறு படிவத்துவானவர்முதலா

Image making in different media is referred to in Manimekhalai:

"மண்ணிலும் மரத்திலும் சுவரிலும்
கண்ணிய தெய்வம் காட்டுநர் வகுக்க"

But unfortunately not a single specimen of early sculptural art is available, due to the fact that they were all made of perishable materials.

As already mentioned **Ghana** and **Sushira** respectively denote the methods of casting-hollow and solid. There are evidences in Chola inscriptions describing the gifted images as

"கனமாக எழுந்தருளிவித்த சண்டிகேசுவரப்ரஸாத தேவர்" - S.I.I. Vol. II, p. 134.

"கன பொல்லலாக செய்த ரிஷபம்" S.I.I. Vol. II., p. 178.

The method of casting of images is mentioned causually in the early literature, until much after the Christian era, we come across a detailed recorded instructions about the procedures to be followed in the matter of casting.

The method of casting is dealt with in the **Silpasastras,** and there is a chapter in **Manasara** and according to Dr.C.Sivaramamurthy, it has an extremely corrupt text. But a short and clear text is available in **Vishnu Samhita**. A detailed and full process is made available to us by Western Chalukyan King Somesvara (12[th] Century AD) in his **Abhilashitartha - chintamani**. These **silpa** and **agama** texts deal with the construction of temples, fashioning of icons with iconographical details and lay down the data for the size and form of these icons.

The **Silpasastras** specifically elaborate the various procedures, such as fixing auspicious time for commencing the work, composition of the ingredients to be chosen and calculating various measuremetns for different gods etc.

Each and every icon murti / murtham has a contemplative hymn - **Dhyanasloka** and the **Sthapathi**, has to fashion the image according to the description. While preparing the icons, the **sthapathi** show his skill and workmanship within the framework of the rules prescribed in the cannons of the texts and creates the remarkable pieces of high quality and receives universal appreciation in unequivocal terms.

From epigraphical references, we have many instances referring to the endowments that have been made for the provision of metal icons in the temple.

Before taking the subject, I would like to bring to the august audience, that there was some strong tendency to date all the early metal icons either as a late Pallava, transition period of Pallava-Chola or why to the Chola period. It is not known how all of a sudden there appeared bronzes in the late Pallava or Chola period without a beginning. Is it a magic that suddenly these images came to the scene all of a sudden.

If we study the output of Chola bronzes in the best of its quality, they are unparalleled in aesthetics, and we cannot assume or presume the sudden blossoms of these wonderful pieces. We must go back to inscriptions and there we have an answer.

The Pallava grantha inscriptions in the Vaikunta-Perumal temple at Kanchipuram refers to the provision of gold for making a plate and a **padimam** for the temple. The inscription refers to a certain Abhimanasiddhi who was a Pallava, gave one thousand **pon** (gold) obviously for the making a plate for offering **bali** and for a **padimam** which is derivation from the Sanskrit word **pratima**, which denotes an image, which can be in stone, wood or metal. But here the image in question is undoubtedly one in gold as the epigraph says that gold was given for making a plate and a **padimam.** Thus this is earlier known inscriptional reference to a metal icon.

Subsequent inscription in the late period, there are references to icons in metal. The one is that of Uthama Chola form Tiruvorriyur (984 A.D.) refers to gold image of Sribalideva. Another inscription of Raja Raja I (1010 AD) from Tanjore records the gift of one gold image of **Kolgaidevar** to be present at the sacred offerings **(Sri bali)** still another inscription of Kulothunga I (1118 AD) from Tiruvarur refers to

Chandrasekharadeva as Sribali **elundarulum** though the metal was not mentioned.

It may be seen that a metal image was the recipient of **sribali** through the ages and the earliest is from the Pallavas.

Though the exact identification of the King Abhimanasiddhi, could not be arrived at, Dr.T.V. Mahalingam surmised that the Abhimanasiddhi could be a Pallava contemporary or held a temporary hegemony in the Pallava Kingdom. It may be said that the inscription could be earlier than 813 AD based on the inscriptions flanking the one under reference in the Vaikunta Perumal temple.

Another inscription of Paramesvaravarma I (670-680 AD) from Kuram refers to the metal image installed in the Siva temple at Kuram.

**Mode of Casting**

There are two methods of casting images in metal : Solid and Hollow. In Sanskrit **Ghana** and **Sushira** are used respectively for solid casting and hollow casting. The process for making solid images is as follows : The beeswax and dammar (குங்கிலியம்) must be correctly mixed with a little oil. The wax thus prepared is known as "prepared wax", with which the required image is fashioned by the **sthapathi**. Care is to be taken while making this wax model, since it serves as a negative for obtaining the finished product. (metal icon). "The technical and aesthetic excellence and perfection of the cast icon depends upon these qualities being present in the wax model". In one sense preparation of wax model is both a process and a product. The technical details such as measurements and the artistic details in the ornaments and drapery have to be carefully verified, before the wax model is ready for casting. "A few cross strappings, made with prepared wax are also fixed on the cast to facilitate easy flow of the mother metal to the various parts on the other. A wax rod ending in a funnel shaped flange known as the wax runner, is also fixed to the base of the model. Later on when the mould is heated and the wax is drained out, this serves as ingress for the molten metal".

Next comes mould making. The wax model is given several coatings, with fine clay secured from ant hill and mixed with combustible material like paddy husk and cow-dung to make a thick mass. Initially the clay is applied in the form of a solution, which enables it to go into every crevice. The heavier and heavier coating is added, till it finally becomes a regular lump. The **sthapathi** should be meticulously careful "is not leaving any space in the wax model uncovered and also in removing any accumulation of air bubble from the surfaces of the coating".

The clay mould then is carefully dried in the mild sun or in the shade. Care should be taken to see that no cracks are formed and the wax model is not melted.

After a few days, the clay mould is ready for casting. When the wax model is prepared and is ready for the preparation of clay mould, arrangements for preparing the metal alloy are carried out. The number of metals to be used in the alloy is five, which were considered to be highly auspicious. These five metals are copper, silver, gold, brass and zinc. These are popularly known as **Panchaloha**. These five metals are said to represent earth, water, fire, air and ether **(pancha bhutas)** denoting metaphysically that the god remains pervading the principal element".

It may be seen from the analysis, copper is mainly found in the icons, sometimes more than 80%.

According to the analysis carried out in the Madras Museum Laboratory copper is mainly found in larger proportion, while other metals are seen in small proportions. Gold and silver, which are said to be added to the alloy are however hardly found in actual analysis.

| | VISHNU<br>9th Century | VISHNU<br>13th Century | VISHNU<br>16th Century |
|---|---|---|---|
| Copper (%) | 98.60 | 94.50 | 89.40 |
| Tin | 0.88 | 1.10 | 3.40 |
| Lead | 0.34 | 1.00 | 2.88 |
| Iron | 0.13 | 0.05 | 0.52 |

Other metals such as zinc, silver, arsenic, antimony, bismuth etc., are in ppm level.

The clay mould with the wax model inside it, is baked skillfully over an open ground oven, which is fuelled by cow-dung cakes. The mould is sufficiently heated to drain out the wax through the funnel shaped flangs already referred to. Even after all the wax has run out of it, the mould is heated a little again. "The heating of the mould has two other functions as well. It removes air bubbles from inside the cavity and also it prevents sudden cooling down of molten metal, which otherwise might cause uneven surface.

When the alloy is ready, it is poured through the orifice into the empty clay mould. The molten metal is carefully poured in a thin, even and continuous streams. Care is taken to see that the hot stream of metal reaches every nook and corner and the images cast should be near perfect. When the entire empty mould is occupied by the metal, it is allowed to

cool down gradually. Then the mould is broken open and the solid metal image is obtained.

Since the image is rough, final touching is given to the image and this is done by cleaning, finishing and engraving. Clay particles sticking to the image are thoroughly removed with the help of the damp cloth. Details of this dress and ornaments are carefully engraved in the image and it is at this point the sthapathi shows his skill in the creation of his works of art.

In the case of hollow images, the subject is modelled in clay and the core is coated with wax, which is again covered with a coat of clay. After draining the wax out by heating, the mould is used for casting the hollow images.

Most of the images are made in solid casting while the ones representing village deities are done in hollow cast.

**History of Bronzes**

The earliest specimen in Tamil Nadu, is the prehistoric figure of a mother goddess from Tirunelveli district (Adichhanallur) and may go back to about 7th century B.C. The earliest metal images in the classical period have come to us from Amaravati, and belong to the early centuries of the Christian era.

The period between 6th and 9th Centuries witnessed vigorous activities in the building of temples. The period of 250 years from 600 AD to 850 AD is a major event in the field of architecture, sculpture, religion and rituals.

Mahendravarman and his son Narasimhavarman were responsible for the rock cut temples and relief sculptures, while Narasimhavarman II (Rajasimha) and Nandivarma Pallava Mallan were responsible for masonry temples or all stone temples. The enlargement of temple complex on one hand and the enlargement of temple rituals such as worship, bathing etc., on the other hand, contributed towards the promotion of scultptural art. Festivals and rituals were side by side conducted and festivals occupied a strong position in the mode of idol worship. The Saivite **nayanmars** and Vaishnavite **alvars** through their devotional hymns propagated the Bhakthi cult i.e., Karaikkal Ammaiyar and Kannappa Nayanar in the Saivite religion, while the Vaishnavite religion is represented by Kulasekhara Alvar,and Tirumangai Alvar. The hymns of the above saints would testify the strong bhakthi devotion they had towards their favourite deity.

As festivals occupied pre-eminent position in the mode of worship, many images were made. When the festivals were observed, there was a

necessity for metal icons for taking processional deities. Thus the **utsavamurtis** (processional deities) were made in large numbers. Saiva Agamas prescribed nine (9) metal images during the daily festival i.e., Ganesa, Siva, Devi, Pasupatamurti, **astradevar**, Golaka Linga, Skanda, and Chandesa - according to Agitagama. All these are to be made in metal, whether gold, silver or copper.

Vaishnava Agamas speak of the images as **archamurti** and prescribe five types of images **karma, utsava, bali, snana** and **sayana.** The term **karma** is not defined clearly. In some temples an aspect of **kautuka bera** is mentioned. This image would be a miniature representation of the main deity. He is to receive the offerings of daily worship.

## Style

The Pallava icons generally have austere decoration. The head dress (crown) of Vishnu would be cylindrical and the sacred thread **(yajnopavita)** falls over the right arm and has a double clasp in some cases. Another feature of this period is that the upper arms start from the elbows of the lower arms. The shoulder tassels **(skandhamalas)** absent in the early Pallava bronzes are found on the right side only in the bronzes of the late Pallava period. The necklaces **(haras)** are quite simple in shape and invariably not more than one or two, are seen in the Pallava images.

The attributes and weapons in this period are naturally held in by the hands. In the case of the discuss **(chakra)**, it is shown in profile fashion : **(prayogachakra)** ready for action. The weapons and attributes are simple and plain and without decorations. The disposition of attributes is another important feature of this period in Vishapaharana from Kilappudanur, Madras Museum), where the deer is shown towards the figure. The **srivatsa** mark on the right chest will be very prominently shown and it is typical of the period (Vishnu standing, Mangammalpuram, Madras Museum).

Coming to physiogonomical traits of the images, in this period, they are natural in pose and moulding without much flexion and have oval shaped face, rounder limbs and flat nose. The loops in the **katisutra** (waist band) are in semi-circular shape.

For dating the bronzes or fixing the period of the bronzes of the Pallava period, the stylistic features that are found in the contemporary stone sculptures of datable period have come to the rescue of the scholars.

To the Pallava period, handful of bronzes is available. They include Ganesa (seated), Vishnu images (two seated and one standing) from

Mangammalpuram, Trichy (now in the Madras Museum, Vishapaharana from Kilappudanur (Madras Museum) Kuram Natesa (Madras Museum) Vishnu standing from Trivandrum Museum, Tripurantaka in Gautama Sarabhai Museum, Ahmedabad, Somaskanda, (Tiruvalangadu, Chengalpattu district), Vadakkalattur Kalyanasundara, Singanallur Trivikrama (fine representation of the theme in metal, probably only one in this aspect in metal etc.)

Cholas who succeeded the Pallavas, in the middle of 9th century A.D., were great patrons of art in all its ramifications i.e., architecture, sculpture in stone, metal and painting. They were in power for nearly four centuries and continued the artistic activities. They were responsible for the creation of a large number of temples and productions of fine metal images. These bronzes are famous for elegance and beauty. It was during the period of the Cholas, metal art reached its perfection and some of them are wonderful creation of art. They receive admiration and appreciation in unequivocal terms.

It was Vijayalaya, founder of the Chola dynasty who established a small kingdom. His son Aditya I (875-906 A.D.) eradicated Pallava power and was able to annex Tondaimandalam and Kongu region by driving out the Pandyas. Aditya constructed several temples along the course of river Cauvery and claims to have built or renovated 108 temples of stone. Some of the bronzes can be ascribed to his period.

Parantaka (907-955) created more stone temples, and we are lucky to have a dated Bronze of Parvati (917 A.D.) of his period. This would help us in understanding the chronological development of metal art. His inscription refers to the Nataraja form of Siva and the **Anandatandava** images started to be made from his time.

Mention may be made of Sembiyan Mahadevi who was a pious lady and she devoted her time in renovating temples. She was responsible for many bronzes consecrated in the temple at Konerirajapuram of which special mention of the images of Tripurantaka is to be made. Another piece of her period is Nallur Parvati.

Raja Raja I (985-1014 AD) is the greatest of the Chola emperors. Though his monumental creation of Big Temple at Tanjore stands as testimony for his achievement, equally he is known for the long list of bronzes denoted to the temple-as evidenced from his inscriptions. He was a devoted devotee of Siva **(Sivapadasekhara)**. The meticulous details given in the inscriptions on the walls of the Big Temple, installation of a Ganesa icon and the measurement in the inscriptions speak of the accuracy

and perfection for which he stood always. Both solid and hollow casting images are in the list. The famous Rishabhavahana and Parvati now in the Tanjore Art Gallery dated 1011 and 1012 respectively coming from Tiruvengadu, are the best examples of his time.

His son Rajendra I (1012-1044 AD) was a great conqueror and his kingdom extended to Srivijaya and at home he went up to Ganges and this title Gangaikondachola is testimony for his victories.

The successors Kulothunga I (1070-1125 A.D.), Vikrama Chola (1118-1135 A.D.) and Kulothunga II (1133-1150 A.D.) were no doubt great emperors, but during this time there was an increasing conventionalisation of art.

The temples of Raja Raja II (1146-1175 A.D.) Airavatesvara at Darasuram and Kulothunga III (1178-1218 A.D.) Kampahareswara at Tribhuvanam are no doubt famous ones and they preserved consecrated bronzes in the respective contemporary periods.

**BRONZES**

The Aditya School of art finds ample evidences in Rama group of Paruthiyur, Rama group of Vadakkupanaiyur, Rama group of Tirucherai etc. It may be noteworthy to note that the title of Kodandarama assumed by Aditya is apt one. Sembiyan Mahadevi School is represented equally by superlative bronzes of Konerirajapuram, Nallur and Tiruvarangulam Natesa. The style and clarity of workmanship, modelling and rendering of stances (**bhangas**) speak for the period. The Raja Raja School of art is represented by a large number of metal icons, donated by him and include

1) nataraja called Adavallan and

2) Dakshinamurthy called Dakshinameruvitankar, are of imposing size.

Through Ardhanarisvara and Bikshatana from Tiruvengadu are of Raja Raja School and dated 1040 and 1045 A.D. respectively, they are made in Rajendra's time. Some of the bronzes in the temple at Gangaikondacholapuram belong to his period.

Mention may be made of a large number of bronzes of the Chola period. Natesa images from Okkur, Tiruvalangadu, Velankanni, Melaperumpallam, Kunniyur, Parvati from Okkur, and Tiruvaduthruai, Parvati with an attendant (**vamanika**) from Tiruvengimalai, Kali from Senniyanviduthi and Tiruvengadu and a host of metal icons.

## Style

In the early Chola period, the head dress of the deities tends to be conical with embellishments. The attributes and the weapons are shown fixed in between the upraised figures. The shoulder tassels which was absent in the Pallava period and found in the right side in his left Pallava period, is prominently shown on the right side, besides appearing on the left shoulders in the late Chola period. It becomes elaborated in late Chola period. The necklaces, which is one or two in the earlier period, are found more elaborately decorated, sometimes with a mango pendent attached to it.

The loops in the waist band tend to taper downwards. The drapery is delineated with prominent folds and sometimes being decorated with geometrical patterns.

The Chola image has a rather circular face with somewhat sharp nose. The torso is somewhat strongly rounded in front. The image tends to become more formal in the latter period. The **srivatsa** mark which is represented in the Vishnu icons, is seen in triangular type in the late Chola images.

## Pandyan bronzes

Though the Pandyas closely followed the Pallava traditions in their rock cut shrines as at Kalugumalai, Tirumalaipuram etc., the Chola idioms find a place in the Pandyan bronzes. The magnificent image of the leg reversed posture of dancing Siva (Poruppumettupatti) peculiar to the silver dance hall at Madurai, now in the Madras Museum belongs to this period.

## Kongu Bronzes

There are some bronzes from Kongu region. They come from Kodumudi, Pudur East and Mannarpalli. Though they follow somewhat the traditions of the Chola art, the physiognomical traits are different. The **Chatura tandava** Nataraja from Kodumudi and Mannarpalli are interesting ones, whereas the Pudur East **Anandatandava** Nataraja of a later date has a similar prabha as that of Mannarpalli Nataraja.

## Vijayanagar Bronzes

The Vijayanagara period was one of the most prolific in metal images. But examples of this period are devoid of life, like contemporary stone sculptures. The art of this period exhibits beauty in its rich and intricate workmanship. This period witnessed construction of large pillared

halls, gateways, **kalyanamandapas** etc. This period witnessed the stress on quantity rather than on quality. Conventionalism of form and elaboration of ornaments are the main tendencies during this period. The images tend to become more formal and conventionalized. The face is usually expressionless with prominent nose and chin, the former sharply pointed, the latter vertically grooved. The abdomen is rounder than before. and tends to droop downwards. The navel is often emphasized by horizonal and vertical rays. There are three lines known as **trivali** above the navel and below the breasts. The **srivatsa** mark on the right chest of Vishnu is of triangular shape. The weapons of Vishnu have elaborate flame decorations. Krishnadevaraya metal icons in Tirupati temple and Parvati from Jambavanodai (now in the National Museum, New Delhi belong to this period).

**Modern Period**

From 1600 onwards there was more stress on the conventionalized emblems, draperies and ornaments. The general effect of the icons produced during this period is one of rigidity and intensified conventionalization. "They are much conventionalized, and the dynamic and rhythmic movement characteristic of early examples, is now replaced by mathematical schematism".

**Portrait Bronzes**

We have seen so far bronzes of Gods and Goddesses, meant for worship. There are some bronzes, as in stones (known as portraits sculptures) representing persons of royal order and devotees. The portrait of queens also are available. Mention may be made of Raja Raja Chola and his queen now in the Gautama Sarabhai collection. They are Raja Raja I and Lokamahadevi, the queen. Another fine portrait bronze from Tiruvengadu deserves special mention. He is the Brahmin General under Raja Raja I and is known as Brahmadirayar. Yet another portrait figure of a queen from Kalahasti and is identified as that of Cholamadevi, the queen of Raja Raja I, from an inscription on the pedestal of the image. As stated earlier, the portrait figure in metal of Krishnadevaraya with his queens in the Tirumala temple is worthy of mention. Yet another portrait figure of a Maratha King in metal with elaborate workmanship, reminiscent of the stone media, deserves our attention.

**Folk Bronzes**

There is yet another class of metal figures known as folk bronzes made in folk style. They represent mostly the village deities. Even some of

காட்சியளிக்கின்றாள். இவளது வலப்புறத்தில் நந்திமுகம் கொண்ட மாந்தனையும் இடதுபுறத்தில் மாந்தியும் காட்டப்பட்டுள்ளனர். தலைக்கருகே காக்கைக்கொடியும் இடது தோளுக்கருகே கழுதை வாகனமும் காட்டப் பட்டுள்ளன.

**சீ. வீரராகவன்,** விழுப்புரம்.
**மங்கையர்க்கரசி வீரராகவன்,** விழுப்புரம்

**60 : 12 பல்லவர் காலச் சிற்பங்கள்**

விழுப்புரம் மாவட்டத்தில் துர்க்கை, சேட்டை, அய்யனார் முதலி அரிய சிற்பங்கள் பல ஊர்களில் கிடைத்துள்ளன. இவை பல்லவர்காலச் சிற்பக்கலையை ஆய்வு செய்வோர்க்கு அரிய சான்றுகளாகும். அவற்றில் சில கீழே தரப்பட்டுள்ளன.

தென்மங்கலம் : (திருக்கோயிலூர் வட்டம்) கிராமத்தில் உள்ள களத்துமேட்டில் 48 அங்குலம் உயரம் அகலம் 32½ அங்குலம் கொண்டுள்ள கற்பலகையில் எட்டுக்கைகளுடன் கூடிய துர்க்கைசிலை பல்லவர் காலத்துக்கு உரிய கலை அம்சத்துடன் காணப்படுகிறது



கொண்டாங்கி : (விழுப்புரம் வட்டம்). எட்டுக்கைகளுடன் கூடிய துர்க்கை உருவம் 2 அடி அகலம் 4 அடி உயரமுள்ள பலகைக்கல்லில் செதுக்கப்பட்டுள்ளது. பல்லவர்காலத்தைச் சார்ந்தது.



தளவானூர் : (விழுப்புரம் வட்டம்) இவ்வூரில் பாண்டுரங்கன் பிள்ளை என்பவர் வீட்டின் முன்புறத்தில் துர்க்கை சிலை உள்ளது. முழங்காலின் கீழ்ப்பகுதி பூமியில் புதைந்துள்ளதால் வீரர், பக்தர், எருமைத்தலை ஆகியவை உள்ளனவா என்று அறிய முடியாமல் உள்ளது. இது பல்லவர் காலச் சிற்பமாகும்.



மேலமங்கலம் : ஊரின் ஏரிகரையில் துர்க்கை சிற்பம் உள்ளது. இச்சிற்பத்தின் முழங்கால் வரை பூமியில் புதைந்துள்ளதால் எருமைத் தலைமேல் நின்றிருக்கும் காட்சி அறிய முடியாமல் உள்ளது. வலக் கையில் உள்ள பிரயோகச் சக்கரத்தைக் கொண்டும் தலைமுடி, உடை ஆகியவற்றைக் கொண்டும் ஒவ்வொரு கையிலும் நிறைய வளையல்கள் அணிந்திருப்பதைக் கொண்டும் முற்காலப் பல்லவர்களின் சிற்பமாகக் கருத இடமளிக்கிறது.



அய்யனார்-நெடிமோழியனூர், : (திண்டிவனம் வட்டம்). தொண்டியாற்றின் கரையில் அமைந்துள்ள இவ்வூரில் மேற்கு பார்த்த வாயில் கொண்ட சிறிய கோயிலில் பல்லவர்கால அய்யனார் சிலை உள்ளது. இதன் உயரம் 137 செ.மீ. அகலம் 89 செ.மீ. பலகைக் கல்லில் இருபக்கம் சாமரம் வீசும் பெண்கள் நிற்க ஒருபக்கமாகச் சாய்ந்து அமர்ந்த நிலையில் அய்யனார் புடைப்புச் சிற்பமாகக் காணப்படுகிறார். வலதுபுறக் காலின்கீழ் குதிரை, நாய் அமர்ந்தபடி காட்சியளிக்கின்றன.



சேட்டை சிற்பங்கள் : (திருக்கோயிலூர் வட்டம்). இவ்வூரில் உள்ள களத்துமேட்டில் உள்ள கற்பலகையில் வலக்கையில் தாமரை மொட்டினைப் பிடித்தபடி உள்ள சிற்பம் சேட்டாதேவியாகும். தலைமுடி, உடை ஆகியனவற்றைக் கொண்டு இச்சிற்பத்தின் காலம் கி.பி. எட்டாம் நூற்றாண்டு எனக் கருதலாம். இது 33 × 29 அங்குலம் அளவுடையது.



அனந்தமங்கலம் : (திண்டிவனம் வட்டம்) இவ்வூரின் வயல்பகுதியில் சேட்டாதேவி எனப்படும் மூத்ததேவி (4 அடி × 3 அடி) பலகைக்கல்லில் மாந்தன், மாந்தியுடன் காணப்படுகின்றாள். மறுபக்கம் காகம், துடைப்பம் காட்டப்பட்டுள்ளன.

**சீ. வீரராகவன்,** விழுப்புரம்
**முத்துளத்திராசன்,** சென்னை.

### 60 : 13 : 1 சிறுத்தொண்டர் வரலாறு கூறும் அம்பலகாரர் செப்பேடு

திருச்செங்கோடு நாணயவியல் ஆய்வாளர் விஜயகுமார் 47 செ.மீ. நீளமும், 27 செ.மீ. அகலமும், 2.25 கிலோ எடையும் கொண்ட அரிய செப்பேடு ஒன்றை கண்டுபிடித்துள்ளார். இருபுறமும் தமிழில் 115 வரிகளில் அச்செப்பேடு எழுதப்பட்டுள்ளது. நெடுநாள் ஓலைச் சுவடியில் இருந்த பட்டயம் 1878ம் ஆண்டு செப்பேடாக வெட்டப்பட்டுள்ளது. மதுரையைச் சேர்ந்த சேது அம்பலக்காரர் சோழநாட்டுத் திருச்செங்காட்டாங்குடியில் அன்னதான மடம் ஏற்படுத்தி திருவஞ்சைக்களம் ஆத்மநாத பண்டாரம் மகன் வேதநாயக பண்டாரம் வசம் மடத்தை ஒப்படைத்துள்ளார்.

சோழநாடு, பாண்டியநாடு, தொண்டை நாட்டுப் பகுதிகளில் அம்பலக்காரர், சேர்வைகாரர், முத்துராயர், முத்திரியப்பார், வன்னியர் என்ற பட்டப்பெயர் பெற்று வாழும் சேது அம்பலம், சோமனம்பலம், குமாரனம்

பலம், முருகனம்பலம், வடுகனம்பலம், குரும்பனம்பலம் ஆகிய ஏழு பிரிவினரும் அந்த ஏழுவகைத் தேவ அம்பலகாரர் தர்மமடத்திற்கு உரியவர்கள். அந்த மடத்தை நிர்வகிக்கவும், அன்னதானம் செய்யவும் ஒவ்வொருவரும் குரு காணிக்கையாக ஆண்டுக்கு இரண்டு பணமும், திருமணம், ருதுசாந்தி, சீமந்தம் இவைகளுக்கு பெண் வீடு இரண்டு பணமும், பிள்ளை வீடு இரண்டு பணமும் கொடுக்க வேண்டும் என்று ஒப்புக் கொண்டுள்ளனர்.

இந்த மடம் திருச்செங்காட்டாங்குடியில் ஏற்படுத்திய காரணத்தால் கி.பி. 7ஆம் நூற்றாண்டில் அங்கு வாழ்ந்த சிறுத்தொண்டர் வரலாறு மிகவும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. 63 நாயன்மார்களில் ஒருவராகிய சிறுத்தொண்டர் வரலாறு கூறும் பெரியபுராணத்தில் கூறப்பெறாத பல அரிய செய்திகள் சிறுத்தொண்டரைப் பற்றி கூறப்பட்டுள்ளன. மகாபாரதக் கதையில் வரும் கர்ணன் சொர்ணதானம் (பொன்) செய்தான். ஆனால் தானத்தில் சிறந்த அன்னதானத்தைச் செய்யவில்லை. அன்னதானம் செய்யும் பொருட்டு கர்ணன் திருச்செங்காட்டாங்குடியில் சிறுத்தொண்டராக அவதாரம் செய்தார் என்று செப்பேடு கூறுகிறது. அன்னதானத்திற்காக மடம் ஒன்றை ஏற்படுத்தி அன்னக்கொடி கட்டி அன்னமிட்டார். சிவபெருமான் சிறுத்தொண்டரின் பிள்ளைக்கரி உண்ண நடந்து வந்த தெற்கு வீதி 'சிலம்பார்க்க நடந்த திருவீதி' என்று அழைக்கப்பட்டது. இவை அனைத்தும் பெரிய புராணத்தில் கூறப்படாத புதிய செய்திகளாகும்.

செ. இராசு, ஈரோடு

**60 : 13 : 2 பிடாரி சிற்பம்**



உளுந்தூர்பேட்டை வட்டம் அரளி கிராமத்தில் அய்யனார்கோயில் பகுதியில் கி.பி.எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த பல்லவர்காலப் பிடாரி சிற்பம் ஒன்று உள்ளது. எட்டுக்கரங்களுடன் சூலம், பாசம், அம்பு, வில், வாள், கேடயம் போன்ற ஆயுதங்களுடன் காணப்படுகிறது. காலடியில் இருவர் பக்கத்தொருவராக அமர்ந்துள்ளனர். பிடாரியின் வாகனமான சிம்மம் பின்புறம் நிற்கிறது.

**சீ. வீரராகவன்,** விழுப்புரம்
**வீர்.ஆர். மங்கைராகவன்,** சென்னை.

**60 : 14 கருநாக்கமுத்தன்பட்டி**

தேனிமாவட்டம், கம்பம் பள்ளத்தாக்கில் சுருளியாற்றின் கரையில் உள்ளது கருநாக்கமுத்தன்பட்டி. இவ்வூரின் ஆற்றங்கரையை ஒட்டிய பகுதியில் சங்ககாலத்தினைச் சார்ந்த மிகப்பெரிய சாம்பல்மேடு ஒன்று உள்ளது. இம்மேட்டில் சங்ககாலத்தினைச் சார்ந்த கருப்பு சிவப்பு பானை ஓடுகள் ஏராளமாகக் கிடைக்கின்றன. இவற்றோடு சங்ககாலமக்கள் பயன்படுத்திய பொருட்களும் கிடைக்கின்றன.

சங்ககால மக்களின் வாழ்விடமாக விளங்கிய இம்மேட்டிற்கு சுருளியாற்றிலிருந்து நீரை எடுத்துச் செல்வதற்குச் சுடுமண் குழாய்கள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இதனை உறுதிப்படுத்தும் வகையில் சுடுமண் குழாய்கள் இப்பகுதியில் பல கண்டறியப்பட்டுள்ளன.

இதுபோன்ற சங்ககால மக்களின் வாழ்விடங்கள் குள்ளப்பகவுண்டன்பட்டி, சுருளிப்பட்டி, கூடலூர் போன்ற பல இடங்களில் உள்ளன. தற்போது இவை நெல் விளையும் வயலாகவும், திராட்சை தோட்டங்களாகவும் மாறிவருகின்றன. இதனால் பழங்காலமக்களின் வாழ்விடங்கள் வரலாற்று ஆய்வாளர்களுக்கு தெரியாமலேயே அழியகூடிய நிலை ஏற்பட்டுள்ளது.

இவ்வாழ்விடங்களை ஒட்டிய பகுதிகளிலும் மலை அடிவாரங்களிலும் பெருங்கற்கால மக்களின் ஈமச்சின்னங்கள் ஏராளமாக காணப்படுகின்றன. இவற்றில் முதுமக்கள் தாழிகள் அதிக அளவில் உள்ளன. முதுமக்கள் தாழிகள் தனியாகவும், கற்பலகைகளுக்கு இடையேயும் புதைக்கப்பட்டுள்ளன. குள்ளப்பகவுண்டன்பட்டியில் ஊருக்கு அருகிலுள்ள மலை அடிவாரத்தில் நூற்றுக்கணக்கான தாழிகள் புதைக்கப்பட்ட இடம் ஒன்று உள்ளது.

**தமிழாதன்,** கூடலூர்.

**60 : 15 புதுக்கோட்டைப் பகுதியில் பழைய சிற்பங்கள்**

சண்டிகேசுவரர் : புதுக்கோட்டை மாவட்டம் மணல்மேல்குடிக்கு அருகிலுள்ள வெள்ளூரில் பாழடைந்த சிவன்கோயிலில் கி.பி. 10 ஆம்

நூற்றாண்டு சண்டிகேசுவரர் சிற்பம் உள்ளது. இருகரங்களுடன் வலக்கரத்தில் மழு ஏந்தி சுகாசனத்தில் அமர்ந்த நிலையில் தலையில் சடாபாரத்துடன் இது காணப்படுகிறது.



நாகராசன் : புதுக்கோட்டை மாவட்டம் நார்த்தாமலையை அடுத்துள்ள சித்துப்பட்டி ஊரணிக்கரையில் ஐந்தலை அரவுக் குடையின் கீழே இருகரங்களுடன் சுகாசனத்தில் வலக்கரத்தில் அபயம்காட்டி அமர்ந்த நாகராசனின் சிற்பம் ஒன்று உள்ளது. பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த இச்சிற்பம் உள்ள பகுதியில் இதே காலத்தினைச் சார்ந்த கௌமாரி, மாகேஸ்வரி, சாமுண்டா முதலிய சப்தமாதர் சிற்பங்கள் காணப்படுகின்றன.



சேஷ்டாதேவி : புதுக்கோட்டை மாவட்டம் ராப்பூசலை அடுத்துள்ள காட்டுக்குள் மாந்தன், மாந்தியுடன் காட்சியளிக்கும் பத்தாம் நூற்றாண்டு சேஷ்டாதேவி சிற்பம் உள்ளது.

**செ. கோவிந்தராஜ், புதுக்கோட்டை.**

### 60 : 16 நெடுமறம் பாண்டியர்கால மடை

சிவகங்கை மாவட்டம் திருப்பத்தூர் வட்டத்திலுள்ளது நெடுமறம். இவ்வூர் ஏரியில் முற்காலப் பாண்டியர் காலத்து கி.பி.எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த கல்மடை காணப்படுகிறது. இம்மடைத்தூணில் கோமாறஞ்சடையனின் வட்டெழுத்துக் கல்வெட்டு உள்ளது. இதில் கொழுவூர்க் கூற்றத்து நெடுமறத்தில் மடை செய்தது குறிப்பிடப்படுகிறது.



**கரு. இராஜேந்திரன், மேலப்பனையூர்**

### 60 : 17 : 1 முற்காலப் பாண்டியர்கால முருகன் சிற்பம்

விருதுநகர் மாவட்டம், சிவகாசி வட்டத்திலுள்ள ஈஞ்சார் என்ற ஊரில் முற்காலப் பாண்டியர் காலத்தில் எடுப்பித்து அழிந்துபோன சிவன்கோயில் உள்ளது. இதில் இருந்த முருகன் சிற்பம் தற்போது தனித்தநிலையில் எடுத்து வைத்து மக்களால் வழிபடப்பட்டு வரப்பெறுகிறது. இச்சிற்பம் கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சார்ந்த முற்காலப் பாண்டியர் கலைக்குச் சிறந்த எடுத்துக்காட்டாய் விளங்குகிறது. நின்ற நிலையில் நான்கு கரங்களுடன் காட்சியளிக்கிறது. மேலிரு கரங்களில் சக்தியும் வச்சிரமும் காணப்படுகின்றன. கீழிரு கரங்கள் தொடை மீது உள்ளன. தலையில் கரண்டமகுடமும் நெற்றியில் தடித்த கண்ணிமாலையும் உள்ளன. கழுத்தில் பட்டையான ஆரமும் மார்பில் பட்டையான புரிநூலும் தவழ்கின்றன.



60 : 17 : 2 தூண் நடுகல்





விருதுநகர் வட்டத்திலுள்ள தம்மநாயக்கன்பட்டியிலுள்ள காட்டுக்காளியம்மன் கோயிலுக்கு மேற்கே நாயக்கர் காலத்து தூண்சிற்ப நடுகல் ஒன்று உள்ளது. இதில் இறந்தபோன வீரனின் வீரச்செயல்களும் அவனுடன் தீப்பாய்ந்து உயிர்நீத்த மனைவியரின் உருவங்களும் நாற்புறமும் சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன. இந்நடுகல்லை 'தம்மன்னசாமி' என்ற பெயரில் ஊரார் வழிபாடு செய்து வருகின்றனர்.

**60 : 17 : 3 நுண்கற்காலப் பாறைகள்**

விருதுநகர் மாவட்டத்தில் குண்டாறு வைப்பாறு, அர்ச்சுனாநதி பாயும் பலவூர்களில் 6000 ஆண்டுகளுக்கு முற்பட்ட நுண்கற்காலக் கருவிகள் கண்டறியப்பட்டுள்ளன. இக்கருவிகள் செய்வதற்குரிய 'செர்ட்' வகைப்பாறைகள் இம்மாவட்டத்திலேயே கிடைக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது. சாத்தூரிலிருந்து சிவகாசி செல்லும் சாலையில் அமைந்த சின்னகாமன்பட்டியில் இவ்வகைப் பாறைகள் உள்ளன. சாலையின் தென்புறம் அமைந்த நிலப்பகுதியில் செர்ட் வகைப் பாறைகள் ஏராளமாக மஞ்சள் வண்ணத்தில் காட்சியளிக்கின்றன.



**ஆர். பாலச்சந்திரன்,** திருத்தங்கல்.

**60 : 18 பண்டைய சுடுமண் தலை**

கும்பகோணம் (பட்டீஸ்வரம்) திருமலைராஜன் ஆற்றில் ஆணின் சுடுமண் தலைப்பகுதி ஒன்று கிடைத்தது. அழகிய உருவமாக கலைநயத்துடன் காட்சியளிக்கிறது. தலையின் நடுப்பகுதியின் மேல் தலைமுடி குடுமியாக காட்டப்பட்டுள்ளது. இந்த பொம்மை கிடைத்த இடத்திலேயே பல்லவர் காசுகளும் கிடைத்துள்ளதால் இது பழமையான உருவமாக இருக்கலாம். இது ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் செய்யப்பட்டிருக்கலாம்.



ஆறுமுகசீதாராமன், தஞ்சை.

### 60 : 19 கூடலூர் புதியகற்கால கருவி

தேனி மாவட்டம், கூடலூர் முல்லையாற்றங்கரையில் புதியகற்கால கருவி ஒன்று கண்டறியப்பட்டது. இதில் காணப்படும் கீறல்கள் ஆய்வாளர்களின் கவனத்திற்கு கொண்டுவரப்படுகிறது.



தமிழாதன், கூடலூர்.

# 61. புதிய வெளியீடுகள்

சி.பத்மநாதன், **இலங்கைத் தமிழ்ச் சாசனங்கள்,** இந்து சமய கலாச்சார அலுவல்கள் திணைக்களம், கொழும்பு, நவம்பர் 2006, 584 பக்கங்கள், விலை ரூ. 1000/- (இலங்கைப் பணம்).

இலங்கையில் கண்டறியப்பட்ட தமிழ்க் கல்வெட்டுகளைப் பல்வேறு காலகட்டங்களில் பல்வேறு அறிஞர்கள் வெளியிட்டுள்ளதைக் தொகுத்து மறுவாசிப்பும் செய்து புதிய விளக்கங்களோடு வெளிவரும் முதல்நூல் இதுவாகும். கி.பி. 13 ஆம் நூற்றாண்டு வரையிலான கல்வெட்டுகள் இத்தொகுப்பில் அடங்கியுள்ளன. இதுவரை வெளிவந்த இலங்கைத் தமிழ்க் கல்வெட்டுகளைத் தேடிக் கண்டறிந்து படிப்பது ஆய்வாளர்க்குக் கடினமாக இருந்து வந்ததை இந்நூல் போக்குகிறது. இதுவரை வெளிவராத பல புதிய கல்வெட்டுகளும் இத்தொகுப்பில் இடம்பெற்றுள்ளன. இலங்கைத் தமிழ்ச்சாசனங்கள் பூர்வாங்க வெளியீடுகள், அநுராதபுரகாலத்துச் சாசனங்கள், சோழர்காலத்துச் சாசனங்கள், பொலன்னறுவைக் காலத்துப் பிரமதேய சாசனங்கள், பொலன்னறுவை காலத்துப் படைவீரர் சாசனங்கள், பொலன்னறுவைக் காலத்து அரசர் பிரகடனங்களும் கோயிற் சாசனங்களும் என்று ஏழு பிரிவுகளாக இந்நூல் பிரிவுபடுத்தப்பட்டுள்ளது. நூலின் இறுதிப்பகுதியில் கல்வெட்டுகளின் வாசகங்களும் சொல்லவுடைவும் இடம் பெற்றுள்ளன. கல்வெட்டுகளின் புகைப்படங்கள் நூலின் இடையிடையேயும் இறுதியிலும் தரப்பட்டுள்ளமை மறுவாசிப்பிற்கு வழிவிட்டு நிற்கும் நூலாசிரியரின் நேர்மையைக் காட்டுகிறது.

இலங்கையில் பிராமிக் கல்வெட்டுகள் எழுதப்பட்ட காலத்தில் தமிழ்மொழி பேச்சுமொழியாக வழங்கியது, தமிழ்மக்கள் இலங்கைப் பூர்வீகக் குடிகளில் ஒரு சாரார் என்பதைக் கல்வெட்டுகளின் மூலமாக நூலாசிரியர் நிறுவியுள்ளார். இத்தொகுப்பிலுள்ள கல்வெட்டுகள் இலங்கை தமிழரின் சமூகப்பண்பாட்டு வரலாற்றை மீட்பதற்கான அடிப்படை மூலங்கள். இந்நூலில் காணப்படும் எறிவீரபட்டினக் கல்வெட்டுகள் தமிழ்நாட்டு எறிவீரபட்டினங்களை மேலும் புரிந்து கொள்ள கிடைத்த அரிய சான்றுகள். திசையாயிரத்து ஐநூற்றுவர் பற்றிய அரிய செய்திகள் இலங்கை தமிழ் கல்வெட்டுகளில் உள்ளன. இந்திய வரலாற்றோடு குறிப்பாகத் தமிழக வரலாற்றோடு இலங்கை கொண்டிருந்த தொடர்புகளை இந்நூல் நன்கு வெளிப்படுத்துகிறது. இலங்கையிலுள்ள பல பௌத்தப் பள்ளிகள் பற்றி தமிழ்க் கல்வெட்டுகள் மூலமாகவே அறியமுடிகிறது என்பது தமிழர்கள் பௌத்த சமயத்திற்கு அளித்த ஆதரவைப் புலப்படுத்துகிறது. மகாவம்சத்திலும் பிறவரலாற்று மூலங்களிலும் கிடைக்காத சான்றுகள் இந்நூலிலுள்ள தமிழ்கல்வெட்டுகளில் இடம்பெற்றுள்ளன.

பிழையின்றி கல்வெட்டுகளைப் படிப்பதிலும் அவற்றிற்கு உரிய விளக்கங்கள் அளிப்பதிலும் நூலாசிரியர் மிகுந்த ஈடுபாடு காட்டியுள்ளார். இலங்கை ஆய்வாளர்கள், பேராசிரியர்களோடு மட்டுமின்றி பேராசிரியர்கள்

நொபொரு காராஷிமா, எ.சுப்பராயலு, ப.சண்முகம் என்று பல அறிஞர்கள் துணைபெற்று இந்நூல் உருவாகியுள்ளது.

இலங்கை தமிழ்ச் சமூகத்தினர்க்கும் தமிழ்நாட்டு வரலாற்றாய்வாளர் களுக்கும் இந்நூல் பெரிதும் பயன்படும் என்பதில் ஐயமில்லை. இதனைத் தொல்லியல் வரலாற்றுப் புலமையோடு பன்மொழியறிவும் தமிழ்புலமையும் ஒருங்கே பெற்ற இலங்கையிலுள்ள மூத்த பேராசிரியர்களுள் ஒருவரான சி.பத்மநாதன் அவர்களைக் கொண்டு உருவாக்கி வெளியிட்டு பெருமை சேர்த்துக் கொண்ட இலங்கை இந்துசமய கலாச்சார அலுவல்கள் திணைக்களம் இந்தியாவிலும் இந்நூல் எளிதில் கிடைக்க வழி செய்ய வேண்டும்.

**வெ. வேதாசலம்**, மதுரை.

Dr. A.L. Srivastava, **Uma-Mahesvara : An Iconographic Study of the Divine Couple**, Sukarkshetra Shodh Sansthana Kasganj, U.P., 2004, pp.240, Figures 62, Line Drawing 64, Price 2500/-.

The present book is a scholarly contribution to Indian Art and Iconography. It deals with one of the distinguished forms of Siva which I feel the best and, foremost example of the synthesis of purusha and prakriti, the male and female principles. Again it is a most syncratic form to bring together both the Saivites and Saktas. A well known Art Historian, A.L.Srivastava feels that the esotericim of the Universal parents was translated into a visible form of Uma-Mahesvara.

The author has analysed all aspects of Uma-Mahesvara in the present work. Parallel forms of other deities has also been discussed and compared. Regional variations of the Uma-Mahesvara sculptures and geographical and socio-cultural reasons behind such differences are discussed in detail. The author has traced out the inherent meaning, source of origin, antiquity, development aesthetics and popularity of this form throughout the country.

The book has been divided into six chapters. The first chapter briefs the different iconographical forms of Siva. The second chapter traces the source of origin of Uma-Mahesvara form through literature and art. The componants of the Uma-Mahesvara form is disscussed in the third chapter. The fourth chapter deserves special notice for it speaks about the temples dedicated to Uma-Mahesvara. The fifth chapter discusses the couple forms of other gods, namely Lakshmi-Narayana, Lakshmi Narasimha, Bhu-varaha, Brahma-Savitri, Sakti-Ganesa, etc. and compares these forms with

that of Uma-Mahesvara. The sixth or the concluding chapter offers the summary and analysis of the author. The author in his conclusion states that "Siva was the first god to be carved in his dampati or couple form by Indian artists".

To substantiate his arguments the author provides sixty-two half tone and sixty-four line-drawing illustrations. Details of illustrations, elaborate bibliography and glossary to Sanskrit terms, add much more credit to this book. A chart showing statewise salient features and regional variations in Uma-Mahesvara sculptures at a glance is also appended. The book is neatly printed on art paper and the get up of the book is very attractive and praiseworthy.

This book certainly will add to our knowledge immensely. It will be much helpful to those who wish to undertake scientific research on similar forms of gods and goddesses.

**G. Sethuraman,** Madurai.

S.M.Ratnavel, P.Gomathinayagam, **In Search of Ancient Wisdom - Irrigation Tanks,** DHAN Foundation Madurai, Oct. 2006, Price Rs. 250/-.

மனித சமூகத்தின் மாண்பிற்கும் வளர்ச்சிக்கும் அடிப்படையாக இருப்பது நீர். தமிழ்நாட்டில் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே இதன் தேவையை உணர்ந்து ஏரிகள், ஊருணிகள் ஆகியவற்றில் தேக்கி வைத்து பயன்படுத்தி வந்துள்ளனர். இன்றைய பாசன அறிவியல் நுட்பம் அறிந்த அனுபவம் படைத்த இருபொறியாளர்களால் பண்டைய மக்கள் எவ்வாறு வேளாண்மைக்கு நீரைப் பயன்படுத்தினர் என்பதை நுட்பமாக ஆய்ந்து வரலாற்று அடிப்படையில் எழுதப்பட்ட நூல் இதுவாகும். இது பாசனக் குளங்களை உருவாக்கியவர்களின் வரலாற்றை மட்டும் அறிந்து வந்த வரலாற்று ஆய்வாளர்கள் தமிழ்நாட்டில் பண்டைய பாசனத் தொழில்நுட்பம் எவ்வாறு இருந்தது என்பதை அறிந்துகொள்ள துணைசெய்கிறது. தொல்லியல் சான்றுகளோடு களஆய்வில் அறிந்த உண்மைகளை வெளிப்படுத்துகிறது. ஏரிகளுக்குரிய இடங்களைக் தேர்வு செய்தல், ஏரிகளை அமைத்தல், ஏரிகளின் அமைப்பு, ஏரியில் நீரைத் தேக்குதல், நிலங்களுக்கு நீரைக் கொண்டு செல்லும்முறை, சங்கிலித் தொடர் போல் அமைந்த ஏரிகள், அணைக்கட்டுகள், ஏரிகளைப் பராமரிக்கும் முறைகள் ஆகியவை அறிவியல் நோக்கில் உரிய வரைபடங்களுடன் இந்நூலில் எடுத்துக்கூறப்பட்டுள்ளன. இவற்றோடு எடுத்துக்காட்டாக அமைந்த சில ஏரிகளின் அமைப்பையும், சில ஊர்களின் நீர்பாசன முறையினையும் இந்நூல் எடுத்து ஆய்ந்துள்ளது. தமிழ்நாட்டின் பண்டைய பாசனத் தொழில்நுட்பத்தையும் பெருமையும் அறிய விழைவோர்க்கு இந்நூல் சிறந்த வழிகாட்டி.

**வெ. வேதாசலம்,** மதுரை.

M.Kannan, Carlos Mena Ed., Negotiations with the Past : Classical Tamil in Contemporary Tamil, Institute Francais de Pondichery - 2006, pages 478.

பழமைக்கும் புதுமைக்கும் பாலத்தை அமைக்கும் முயற்சியில் பல்வேறு துறைகளைச் சார்ந்த தலைசிறந்த ஆய்வாளர்கள் எழுதிய கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. தொல்லியல், செவ்வியல் இலக்கியம், இலக்கணம், இசை, மொழியியல், நாட்டுப்புறக்கலை என்று பல்துறை சார்ந்த தலைசிறந்த ஆய்வுகள் அடங்கிய பெட்டகம் இந்நூல். பல்துறையிலுள்ள மூலங்களின் உண்மையை உணர வேண்டிய அவசியமும் மக்களுக்கு அவற்றை உணரவைக்க வேண்டிய தேவையும் முனைப்பும் இந்நூல் கட்டுரைகளில் வெளிப்படுகின்றன.

**கு. சேதுராமன்,** மதுரை.

ந. அதியமான், **கடல்சார் தொல்லியல் - வரலாறும் நுட்பமும்,** தமிழ் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், ஏப்ரல் 2006, 342 பக்கங்கள், விலை ரூ.120.

கடல்சார் தொல்லியல் குறித்து விரிவாகத் தமிழில் எழுதப்பட்ட தனிநூல் என்ற பெருமை இந்நூலுக்கு உண்டு. ஆங்கிலத்தில் கடல்சார் தொல்லியல் பற்றிய நூற்கள் பல இருப்பினும் தமிழ்மக்கள் அறியும் வகையில் நூல் ஒன்று இல்லையே என்ற குறையை இந்நூல் போக்குகிறது. உலகக்கடல்சார் தொல்லியல் வரலாறு, கடல்சார் தொல்லியல் அறிஞர்கள், இந்தியாவின் கடல்சார் தொல்லியல் ஆய்வுகள் பற்றி இந்நூல் விரிவாகத் திறம்பட எடுத்துக்கூறுகிறது. அதே வேளையில் கடல் அகழாய்வு மேற்கொள்ளும் முறைகளையும் அதற்குரிய சாதனங்களையும் பற்றி இந்நூலின் பிற்பகுதியில் இத்துறையில் பல்லாண்டுகள் அனுபவம் வாய்ந்த இந்நூலாசிரியர் எடுத்துக் கூறியுள்ளார். படிப்போர்க்கு எளிதில் புரிதல் ஏற்படும் வகையில் ஏராளமான ஒளிப்படங்களும் வரைபடங்களும் இந்நூலில் தரப்பட்டுள்ளமை இந்நூலின் தனிச்சிறப்பாகும். நூலில் கூறப்பட்டுள்ள செய்திகளை எளிதில் அறிந்துகொள்ளும் முறையில் கடல்சார் தொல்லியல் குறித்த கலைச்சொற்களும், சொல்லடைவும் நூலின் இறுதியில் தரப்பட்டுள்ளன.

**வெ. வேதாசலம்,** மதுரை.

ந. அதியமான், பா.ஜெயக்குமார் (பதிப்பாசிரியர்கள்), **தமிழகக் கடல்சார் வரலாறு,** அண்மைக்கால ஆய்வுகள் தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், நவம்பர் 2006, 200 பக்கங்கள், விலை ரூ. 90.

தமிழ்நாட்டு கடல்சார் வணிகத்தைப் பல்வேறு கோணங்களில் படம் பிடித்துக் காட்டும் இருபத்திரண்டு கட்டுரைகள் அடங்கிய கட்டுரைத் தொகுப்பு. இதில் அழகன்குளம், மருங்கூர், பூம்புகார், மரக்காணம் பழவேற்காடு, மோட்டுப்பள்ளி, நாகப்பட்டினம், நாகூர் துறைமுகங்கள் தனித்த நிலையில் ஆய்வு செய்யப்பட்டுள்ளன. தொண்டைநாடு,

பாண்டியநாடு முதலிய நாடுகளிலுள்ள துறைமுகப் பட்டினங்கள் காலவாரியாகத் தொகுத்து ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இவற்றோடு இடைக்காலத் தமிழ்நாட்டில் சிறப்புடைய பல்வேறு வணிகக்குழுக்கள் பற்றிய ஆய்வுக்கட்டுரைகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன. அகழாய்வு, கல்வெட்டு, ஓலை ஆவணங்கள், ஓவியங்கள், காகித ஆவணங்கள் முதலிய அடிப்படை ஆதாரங்களிலிருந்து திறம்பட எழுதப்பட்ட பல புதிய செய்திகள் அடங்கிய கட்டுரைகளை இந்நூலில் காணமுடியும். தமிழ்நாட்டின் பண்டைய வெளிநாட்டு வணிகம், உள்நாட்டு வணிகம் பற்றிய அறிய விழைவோர்க்கு இந்நூல் அரிய விருந்து. ஆய்வாளர்க்குப் பயன்படும் முறையில் சொல்லடைவு நூலின் இறுதியில் தரப்பட்டுள்ளது.

**கு. சேதுராமன்,** மதுரை.

சொ. சாந்தலிங்கம், **தமிழர் பண்பாட்டுப் பதிவுகள்,** அருள் பதிப்பகம், சென்னை, டிசம்பர் 2006, 232 பக்கங்கள், விலை ரூ.110.

தமிழகத் தொல்லியலில் ஆழ்ந்த அனுபவம் படைத்த ஆசிரியரின் இருபது கட்டுரைகள் அடங்கிய தொகுப்பு. இதன் முதல் பகுதியில் சதாசிவமூர்த்தி, திரிபுராந்தகர், சேஷ்டாதேவி, சண்டீகேசுவரர், கல்யாணசுந்தரர் பற்றிய வரலாறும் சிறப்பும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன. இரண்டாம் பகுதியில் பாண்டியரின் சிற்பக்கலை, ஓவியக்கலை, பல்லவர்காலப் பண்பாட்டுக் கூறுகள், பல்லவரின் நீர்மேலாண்மை, பிற்காலப் பாண்டியரின் நீதி குறித்த கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன. மூன்றாம் பகுதியில் தமிழக வரலாற்றின் அரசியல், சமுதாயம், நிர்வாகம், கலை, குறித்த கட்டுரைகள் காணப்படுகின்றன. மேலும் இப்பகுதிகளில் மன்று, திணை-பெருந்திணை முதலிய ஆய்வுக்கட்டுரைகளும் இடம் பெற்றுள்ளன. தமிழக வரலாற்றின் மரபையும் பண்பையும் புரிந்து கொள்ள துணை செய்யும் பல புதிய செய்திகள் இந்நூலில் காணப்படுகின்றன.

**சு. கண்ணன்,** சிதம்பரம்.

இரா. நிரஞ்சனாதேவி, **தென்னிந்திய மருத்துவ வரலாறு**, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை - 2004, 381 பக்கங்கள், விலை ரூ.115.

இலக்கியம், கல்வெட்டு, அகழாய்வு, கலை, முதலிய பல்வேறு ஆதாரங்களை அடிப்படையாகக் கொண்டு திறம்பட எழுதப்பட்ட முனைவர்பட்ட ஆய்வேடு இந்நூல். இதில் நான்கு அத்தியாயங்களில் தென்னிந்தியாவின் மருத்துவ வரலாறு எடுத்துக் கூறப்பட்டுள்ளது. முதல் அத்தியாயத்தில் பிறநாடுகளில் காணப்படும் வரலாற்றுக்கு முந்தியகாலத்திலிருந்து காணப்படும் ஆதிகால மருத்துவச் செய்திகள் இடம் பெற்றுள்ளன. இதில் தென்னிந்தியாவில் ஆதிகால மருத்துவம் பற்றியும் ஆராயப்பட்டுள்ளது. இரண்டாவது அத்தியாயத்தில் காலவாரியாக உலக நாடுகளின் மருத்துவ வளர்ச்சி எடுத்துக்கூறப்பட்டுள்ளது. இதில் ஆயுர்வேதம், யுனானி மருத்துவம் பற்றி எடுத்துக் கூறப்பட்டு இந்திய வரலாற்றில் காலவாரியான மருத்துவம் குறித்த செய்திகள் வரலாற்று

நோக்கில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. தமிழ்நாடு தவிர்த்த கர்நாடகம், ஆந்திரம், கேரளம் முதலிய மாநிலங்களில் மருத்துவ வரலாறு மூன்றாம் அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ளது. நான்காவது அத்தியாயத்தில் தமிழ்நாடு மருத்துவ வளர்ச்சியின் வரலாறு விரிவாகவும் ஆழமாகவும் எடுத்துக் கூறப்பட்டுள்ளது. இதில் தமிழ்நாட்டு மருத்துவ முறைகள், மருந்துகள், நோய்கள், மருத்துவமனைகள், மருத்துவக்கல்வி, மருத்துவ தெய்வங்கள் பற்றி பல செய்திகள் இடம் பெற்றுள்ளன. உலக மருத்துவ வரலாறு, இந்திய மருத்துவ வரலாறு, இவற்றோடு தமிழ்நாட்டு மருத்துவ வரலாற்றையும் அறிந்துகொள்ள விழைவோர்க்கு இந்நூல் துணை செய்யும் என்பதில் ஐயமில்லை.

**வெ. வேதாசலம்,** மதுரை.

R. Niranjana Devi, **Medicine in South India**, Eswar Press, Chennai - 2006, pp. 358, price Rs. 675.

இந்நூல் இரா. நிரஞ்சனாதேவியின் 'தென்னிந்திய மருத்துவ வரலாறு' என்ற நூலின் ஆங்கில வடிவமாகும். ஆங்கிலத்தில் எழுதப்பட்ட இந்நூல் முதலில் தமிழ்ப்படுத்தப்பட்டு வெளிவந்துள்ளது.

**வெ. வேதாசலம்,** மதுரை.

புலவர் செ.இராசு, **தமிழக இஸ்லாமிய வரலாற்று ஆவணங்கள்,** கே.கே.எஸ்.கே. கல்வி அறக்கட்டளை, திருநகர் காலனி, ஈரோடு-3, பக். 232 (ஒளிப்படங்களுடன்), 2007, விலை ரூ.100/-.

இந்நூல் "மதநல்லிணக்கம்" என்ற கருத்தை மையமாகக் கொண்டு கல்வெட்டு, செப்பேடு, நாணயம், தாள் மற்றும் ஓலை என தமிழகத்தில் கிடைக்கப்பெற்ற இஸ்லாமியர் தொடர்புடைய அனைத்து வகையான வரலாற்று ஆவணங்களையும் தாங்கி நிற்கிறது. இதிலுள்ள ஆவணங்கள் யாவும் இஸ்லாமிய அரசர்கள் அல்லது ஆட்சியாளர்கள், அலுவலர்கள், வணிகர்கள், பொதுமக்கள் எனப் பல்வேறுபட்ட நிலையினைச் சேர்ந்தவர்கள் இந்து கோயில்கட்கும் மடங்களுக்கும் செய்த அறப்பணிகள், வழங்கிய கொடைகள் அதேபோன்று இந்து சமயம் சார்ந்த மன்னர்கள் பள்ளிவாசல், தர்க்காக்களுக்கு வழங்கிய கொடைகள் பற்றிப் பேசுகின்றன. எ-கா. : சங்கர மடத்திற்கு இஸ்லாமியர் அளித்த கொடை, பார்ப்பனப் பெண்ணுக்காக உயிர்துறந்த இஸ்லாமியர், மாரியம்மன் புகழ்பாடிய இஸ்லாமியர், நீர்ப்பாசனவசதிக்குக் (கால்வாய், கலிங்கு, மதகு, குளம் ஏற்படுத்தியமை) இஸ்லாமியர்கள், சேதுபதி மன்னர்கள் பள்ளிவாசல்களுக்கு அளித்த கொடைகள் என நூற்றுக்கும் மேற்பட்ட ஆவணங்கள் இந்நூலில் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன. சமூக வரலாற்று ஆய்வாளர்களுக்கு இந்நூல் மிகவும் பயன்படும்.

**பா. ஜெயக்குமார்,** தஞ்சாவூர்.

# 62. தமிழகத் தொல்லியல் கழக 16 ஆம் ஆண்டுக் கருத்தரங்கு அறிக்கை

பா. ஜெயக்குமார், செயலர்.

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 16 ஆம் ஆண்டுக் கருத்தரங்கு மற்றும் ஆவணம் இதழ்-17 வெளியீட்டு விழா 2006 ஜூலை 22, 23 ஆகிய இருநாட்கள் தருமபுரி, ஆட்டுக்காரன்பட்டியிலுள்ள பரம்வீர் பானாசிங் மெட்ரிக் மேனிலைப் பள்ளியில் சிறப்பாக நடைபெற்றது. இக்கருத்தரங்கின் உள்ளூர்ச் செயலராக திரு.சுகவனமுருகன் அவர்கள் செயல்பட்டார்.

22.07.2006 காலை 10.30 மணிக்கு கருத்தரங்கின் தொடக்கவிழா நடைபெற்றது. திரு.சி.ஸ்ரீதரன் (தலைவர், பரம்வீர் பானாசிங் மெட்ரிக் மேனிலைப்பள்ளி) அவர்கள் வரவேற்புரை நல்கினார்.

விழாவிற்குத் தலைமை தாங்கிய பேரா. முனைவர் எ.சுப்பராயலு அவர்கள் "தருமபுரியின் தொன்மைச் சிறப்பு மற்றும் அண்மைக்காலத்தில் அப்பகுதியில் மேற்கொள்ளப்பட்ட களாய்வு பற்றிக் குறிப்பிட்டதோடு 1989ல் காணப்பட்ட பல தொல்பொருட்கள் தற்பொழுது அங்கு காணப்படவில்லை என்பதையும் சுட்டிக்காட்டினார். மேலும், இதுபோன்ற இழப்புக்கள் நடைபெற்றிருக்க தொல்பொருட்கள் காணப்படும் இடங்களிலேயே அவைகளைப் பாதுகாக்கும் வகையில் அருங்காட்சியகம் (Site Museum) அமைப்பதின் அவசியத்தையும் ஆவணப்படுத்துதலின் முக்கியத்துவத்தையும் எடுத்துரைத்தார்.

கருத்தரங்கினைத் துவக்கி வைத்து சிறப்புரை நல்கிய முனைவர் ஜி.இலட்சுமி நாராயணா (துணைவேந்தர், திராவிடப் பல்கலைக்கழகம், குப்பம்) அவர்கள் தமது உரையில் "தருமபுரி தமிழகத்திற்கு மட்டுமன்றி தென்னிந்தியப் பண்பாட்டிற்கே மிகவும் முக்கியத்துவம் வாய்ந்த தொல்லியல் பகுதி என்பதால் இவ் ஆய்வுக்களத்தைப் பயன்படுத்துவதில் இளம் ஆய்வாளர்கள் முக்கியப் பங்காற்ற வேண்டும் எனக் குறிப்பிட்டார்.

புலவர் பெருமாள்ராசு, பேரா. தமிழவன் மற்றும் பேரா. கி.அரங்கன் ஆகியோர் வாழ்த்துரை வழங்கினர். கழக இணைச் செயலர் பேரா. முனைவர் இல.தியாகராஜன் அவர்களின் நன்றியுரையுடன் கருத்தரங்கத் தொடக்கவிழா நிறைவுற்றது.

தொடக்கவிழாவினைத் தொடர்ந்து 12.15 மணி முதல் 2.15 மணி வரை அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. இவ் அமர்விற்கு பேரா.முனைவர்.ப.சண்முகம் (கழகத் துணைத்தலைவர்) அவர்கள் தலைமையேற்று சொற்பொழிவாளர்களை அறிமுகப்படுத்தினார். தி.நா.சுப்பிரமணியம் நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 8ஆவது சொற்பொழிவாக "தென்னிந்திய நடுகற்கள்" என்ற தலைப்பில் முனைவர் இரா.பூங்குன்றன் (முன்னாள் உதவி இயக்குநர், தமிழ்நாடு அரசு

தொல்லியல்துறை) அவர்களும், கோவிலூர் ஆதின அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 5 ஆவது அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 5ஆவது சொற்பொழிவாக "செப்புத் திருமேனிகள்" என்ற தலைப்பில் முனைவர் வி.என்.ஸ்ரீனிவாசதேசிகன் (முன்னாள் உதவி இயக்குநர், தமிழ்நாடு அரசு அருங்காட்சியகத்துறை) அவர்களும் நிகழ்த்தினர்.

2005 ஜூலை 31 ஆம் தேதி திருவெறும்பூரில் (திருச்சிராப்பள்ளி வட்டம்) நடைபெற்ற கழகப் பொதுக்குழுவில் முடிவு செய்தபடி இவ்வாண்டு முதல் இளம் ஆய்வாளர்களுக்கான போட்டி அமர்வு மாலை 3.00 முதல் 4.30 மணி வரை நடைபெற்றது. தொல்லியல்சார் ஆய்வில் ஈடுபடும் இளம் மாணவர்களை ஊக்கப்படுத்தும் நோக்கில் இந்த அமர்வு தொடங்கப் பெற்றுள்ளது என்பதை அறிமுகஉரை நிகழ்த்திய பேரா. முனைவர் கா.ராஜன் அவர்கள் குறிப்பிட்டார். இந்த அமர்விற்கு நடுவர்களாக பேரா. முனைவர் கு.சேதுராமன் மற்றும் முனைவர் வெ.வேதாசலம் ஆகியோர் செயல்பட்டனர். பரிசு பெறுவதற்குத் தேர்வு செய்யப்பட்ட கட்டுரைகள் விவரம் பின்வருமாறு:

1. **தமிழகத் தொல்லியல் கழகத்தின் பரிசு ரூ.1000/-**

(பரிசுத் தொகை வழங்கியவர் பேரா. இல.தியாகராஜன் அவர்கள்)

எம்.எஸ்.ராம்ஜி - பெரம்பலூர் வட்டாரத் தொல்லியல்

2. **பேரா. முனைவர் இராசு.பவுன்துரை அவர்களின் பரிசு ரூ.1000/-**

இரா. ரமேஷ் - மேட்டூர் வட்டாரத்தில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள்

3. **விழுப்புரம் திரு.சி.வீரராகவன் அவர்களின் ப.சின்னக்கண்ணு நினைவுப் பரிசு ரூ.1000/-** (இருவருக்குச் சமமாகப் பிரித்தளிக்கப்பட்டது).

வெ. பழனிச்சாமி - தேனி மற்றும் போடிநாயக்கனூர் வட்டாரங்களில் கண்டுபிடிக்கப்பட்ட தாழிகள்

வெ. யோகேஸ்வரன் - வெள்ளாற்றுப் பள்ளத்தாக்கில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

4. **பேரா. ம. இராசசேகரதங்கமணி அவர்களின் பரிசு ரூ.1000/-** (பெண்களுக்கு மட்டும்)

ஆ. துளசி - கடலகழாய்வில் கிடைத்துள்ள நங்கூரங்கள்.

மாணவர்களுக்கான போட்டி அமர்வினைத் தொடர்ந்து 4.30 முதல் 5.30 மணிவரை முனைவர் கா.ராஜன் அவர்கள் திண்டுக்கல் மாவட்டம், கொடைக்கானல் வட்டம், தாண்டிக்குடியில் தமிழ்ப் பல்கலைக்கழகம் நடத்திய அகழாய்வுகள் குறித்து ஒளிப்படங்களுடன் உரை நிகழ்த்தினார்.

இரவு 9.30 முதல் 10.30 மணி வரை ஒகேனக்கலில் கழகச் செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது.

23.7.2006 அன்று காலை 10.30 மணிக்கு ஆவணம் 17ஆவது இதழ் வெளியீட்டுவிழா சிறப்பாக நடைபெற்றது. திரு.கே.எம்.தட்சிணாமூர்த்தி (பெண்ணையாறு தொல்லியல் சங்கம்) அவர்கள் விழாவில் கலந்து கொண்டவர்களை வரவேற்றார். முனைவர் ப.சண்முகம் அவர்கள் தனது தலைமை உரையில் "தமிழகத் தொல்லியல் கழகம் தொடங்கப்பட்டதற்கான நோக்கத்தில் சிதறாமல் இருப்பதால்தான் 16 ஆண்டுகளாக இவ்வமைப்பு தொடர்ந்து தனது பணியைச் சிறப்பாகச் செய்துவருகிறது" எனக் குறிப்பிட்டார்.

திரு.தி.ஸ்ரீ.ஸ்ரீதர், இ.ஆ.ப. (சிறப்பு ஆணையர், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை) அவர்கள் ஆவணம் 17 ஆவது இதழை வெளியிட்டு சிறப்புரை ஆற்றினர். முதல் பிரதியை திரு.சி.பார்த்திபன் (தலைவர், பரம்வீர் பானாசிங் மெட்ரிக் மேனிலைப் பள்ளி) அவர்கள் பெற்றுக் கொண்டார்.

திரு.தி.ஸ்ரீதர், இ.ஆ.ப. அவர்கள் தனது சிறப்புரையில் "தமிழகத் தொல்லியல் கழகத்தின் உறுப்பினர்களின் தன்னலமற்ற சேவைவ்யைப் பாராட்டியதோடு தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை எப்பொழுதும்போல் தொடர்ந்து முழு ஒத்துழைப்பு அளிக்கும்" எனக் குறிப்பிட்டார். மேலும், கழக உறுப்பினர்கள் திரு.இரா.மணி (செஞ்சி), பேரா.ம.இராசசேகரத் தங்கமணி (கரூர்) ஆகியோரின் நூல்களை வெளியிட்டதோடு மாணவர்களுக்கான போட்டி அமர்வில் தேர்வு செய்யப்பட்ட கட்டுரையாளர்களுக்குப் பரிசுத் தொகைக்ளையும் வழங்கினார்.

வாழ்த்துரை வழங்கிய திரு.தேவ.பேரின்பன் (ஆசிரியர், சமூக விஞ்ஞானம்), பேரா. முனைவர் வீ.அரசு (தலைவர், தமிழிலக்கியத்துறை, சென்னைப் பல்கலைக்கழகம்), முனைவர் மே.து.ராசுகுமார் (பதிப்பாசிரியர், மக்கள் வெளியீடு, சென்னை) ஆகியோர் தங்களது வாழ்த்துரைகளில் வருங்காலங்களில் தமிழகத் தொல்லியல் கழகத்தின் பணிகள் மேலும் சிறப்பாக அமைவதற்குப் பல நல்ல கருத்துகளை வெளிப்படுத்தியமை இவ்விழாவிற்குச் சிறப்பு சேர்த்தது எனில் மிகையன்று. கழகச் செயலரின் நன்றியுரையுடன் ஆவணம் இதழ் வெளியீட்டு விழா நிறைவுற்றது.

பிற்பகல் 2.00 முதல் 4.00 மணி வரை கருத்தரங்க அமர்வு நடைபெற்றது. இந்த அமர்வில் அளிக்கப்பெற்றக் கட்டுரைகள் வருமாறு :

| வ.எண் | கட்டுரையாளர் | தலைப்பு |
|---|---|---|
| 1. | செ.கோவிந்தராஜ் | நாங்குபட்டியில் வேளிர் கற்றளி |
| 2. | த.த.தவசிமுத்து | காயல்பட்டினம் மீசான் கல்வெட்டு |
| 3. | ஜெ.சௌந்திரராஜன் | அய்ஹோள் 2ஆம் புலிகேசி சிற்பம் |
| 4. | டி.ரெங்கநாதன் | திட்டக்குடி ஊர்ப்பெயர்கள்-ஓர் ஆய்வு |
| 5. | எம்.மதியழகன் | திருவேந்திபுரம் பாண்டியர் கல்வெட்டு |
| 6. | க.கருப்பையா | ஆனையம்பட்டி கல்வெட்டு |

| | | |
|---|---|---|
| 7. | இரா.மணி | செஞ்சிக் கோட்டை |
| 8. | பா.சாம்சத்தியராஜ் | விருதுநகர் மாவட்டம் கொத்தனேரி நடுகல் கல்வெட்டுகள் |
| 9. | த.ரமேஷ் | தாதாபுரம் சோழர்கால ஓவியங்கள் |
| 10. | ந.சுந்தரராஜன் | சேலம் செவ்வாய்ப் பேட்டை தாசி கல்வெட்டு |
| 11. | கோ.திருமூர்த்தி | பஞ்சவன்மாதேவி ஈஸ்வரம்-ஓர் ஆய்வு |
| 12. | சி.வீரராகவன் | தாமல் நினைவுக்கல் |
| 13. | கூ.பிச்சைபிள்ளை | அரளிசெக்குக் கல்வெட்டு |
| 14. | இரா.இரவி | காளப்பட்டி தொல்லியல் எச்சங்கள் |

மாலை 4.00 முதல் 5.00 மணி வரை கழகப் பொதுக்குழுக் கூட்டம் நடைபெற்றது. தொல்லியல் ஆய்வு மேலும் வளர்ச்சியடைவதற்கானப் பல கருத்துக்களை உறுப்பினர்கள் பலரும் முன்வைத்தனர். அடுத்த மூன்று ஆண்டுகளுக்குக் கழகத்தை வழிநடத்த புதிய செயற்குழுவை அமைத்தமை குறிப்பிடத்தக்கது. கழகப் பொருளாளர் நன்றி தெரிவிக்கக் கூட்டம் நிறைவுற்றது.

## அஞ்சலி

### எஸ்.எம்.கமால்

தோற்றம் : 15.10.1928 மறைவு : 31.05.2007

வரலாற்றாசிரியர் எஸ்.எம்.கமால் அண்மையில் இராமநாத புரத்தில் மறைந்தார். இவரது மறைவு தமிழக வரலாற்றிற்கும் குறிப்பாகச் சேதுபதிநாட்டு வரலாற்றிற்கும் பேரிழப்பாகும். வட்டாட்சி-யராக ஓய்வுபெற்ற இவர் வரலாற்றின் மீதும் தமிழ் மீதும் மிகுந்த பற்று கொண்டவர். முப்பத்தைந்து ஆண்டுகளாகப் பல இலக்கிய வரலாற்றுக் கருத்தரங்குகளை இராமநாதபுரத்தில் நடத்தியவர். இராமநாதபுரம் தமிழ்ச் சங்கத்தினைத் தோற்றுவித்தவர். பல வரலாற்று, இலக்கியக் கழகங்களின் உறுப்பினர். தமிழகத் தொல்லியல் கழகத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவர். இதன் துணைத்தலைவராக இருந்தவர். சேதுபதிகளின் செப்பேடுகள், கல்வெட்டுகள், சேதுபதி மன்னர்களின் வரலாறு, குறித்த சிறந்த ஆய்வுநூற்களோடு மேலும் பல ஆய்வு நூற்களையும் கட்டுரைகளையும் வெளியிட்டவர். தாம் எழுதிய நூற்களுக்காகப் பல பரிசுகளையும் விருதுகளையும் பெற்றவர். அவரது மறைவிற்குத் தமிழகத் தொல்லியல் கழகம் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

# கட்டுரையாளர்கள்

ஆறுமுகசீதாராமன்
12, ராஜாராஜன் நகர்
மானோஜிப்பட்டி (தெற்கு), தஞ்சை.

இனியன், இ.
பி. 11, குல்மோகர் அடுக்ககம்
35, தெற்குபோக்சாலை, தி.நகர்
சென்னை – 17.

இராசன், கா.
வரலாற்றுத்துறை
மத்திய பல்கலைக்கழகம்
புதுச்சேரி.

இராசவேலு, சு.
துணைக் கல்வெட்டுக்
கண்காணிப்பாளர் அலுவலகம்
மத்திய தொல்லியல் துறை, சென்னை.

இராசு, செ.
64/5, டி.பி.ஜி. காம்ப்ளெக்ஸ்
புதிய ஆசிரியர் குடியிருப்பு அருகில்
ஈரோடு.

இராம்ஜி, எம்.எஸ்.
கீழகொளத்தூர்
பெரம்பலூர் மாவட்டம்.

இராசேந்திரன், கரு.
மேலப்பனையூர் (அஞ்சல்)
புதுக்கோட்டை மாவட்டம்.

இரவிச்சந்திரன், பெ.
கௌரவ விரிவுரையாளர்
அரசு கலைக்கல்லூரி
வரலாற்றுத்துறை, அரியலூர்.

உத்திராடம், கோ.
அன்னம்பாக்கம்
திண்டிவனம் வட்டம்.

ஐராவதம் மகாதேவன்
பி–1, நடுமுகை அபார்ட்மென்ஸ்
பிருந்தாவனம் நகர் விரிவு,
ஆதம்பாக்கம், சென்னை.

கணேசன், நாக.
காப்பாட்சியர்
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை
கரூர் அருங்காட்சியகம், கரூர்.

கிருஷ்ணமூர்த்தி, கோ.
26/E புதுத்தெரு, புது நகர்
வரகால்பட்டு (கருப்புகேட்)
கடலூர் மாவட்டம்.

குமார், கி.
இ.103, பொதுப்பணித்துறை
குடியிருப்பு, சைதாப்பேட்டை
சென்னை.

கோபாலன், தே.
தொல்லியல் அலுவலர்
தமிழ்நாடு அரசு தொல்லியல்துறை
மதுரை.

கோவிந்தராஜ், செ.
காப்பாட்சியர், அரசு அருங்காட்சியகம்
புதுக்கோட்டை.

சொ. சாந்தலிங்கம்
பிரிதம் தெரு, துரைசாமி நகர், மதுரை.

சாம் சத்தியராஜ், பா.
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம், மதுரை.

சுதாகர், த.
கீழ்கொளத்தூர், பெரம்பலூர் மாவட்டம்.

சுதாகர், பெ., பொய்யூர், அரியலூர்.

சுப்பராயலு, எ.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம், தஞ்சை.

செல்வக்குமார், சி.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

செயக்குமார், பா.
கல்வெட்டியல் – தொல்லியல்துறை
தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சை.

செயராமன், இர.
கல்வெட்டாய்வாளர்
தொல்லியல்துறை, தஞ்சை.

சேதுராமன், கு.
கலை வரலாற்றுத்துறை
மதுரைக் காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை.

தியாகராசன், இல.
வரலாற்றுத்துறை
அரசுக்கலைக் கல்லூரி
அரியலூர்.

துளசேந்திரன், ஆ.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

திருநங்கை, வே.
எம்.பில். மாணவி
கலை வரலாற்றுத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்.

பாண்டுரங்கன், செ.
கீழ்க்கல்பூண்டி,
கடலூர் மாவட்டம்.

பாலச்சந்திரன், ஆர்.
272, பி–4, எஸ்.என்.புரம் ரோடு
சரசுவதி நகர், திருத்தங்கல்.

பிச்சைபிள்ளை. கூ., விழுப்புரம்.

பூங்குன்றன், ர.,
காட்பாடி.

வேங்கடேசன், ந.
11, கிழக்கு சந்நிதி வீதி, வில்லியனூர்.

வெங்கடேசன், ப.
3.178, கம்பன் தெரு
பெல்லியப்பா நகர், வாலாஜா பேட்டை.

முத்து எத்திராசன்
128, காமராசர் குடியிருப்பு
தெற்கு உசுமான் சாலை
தியாகராய நகர், சென்னை.

வள்ளி, நா., காரைக்குடி.

விசயவேணுகோபால், கோ.
பிரெஞ்சு இந்தியக்கழகம், புதுச்சேரி.

வீரராகவன், சி.
மங்கையர்க்கரசி வீரராகவன்,
ஐ.பி.எம்.எஸ். பில்டிங்ஸ்
கே.கே. சாலை, விழுப்புரம்.

வேதாசலம், வெ.
கல்வெட்டாய்வாளர்
தொல்லியல்துறை, மதுரை.

யதீஸ்குமார், வி.பி.
கல்வெட்டியல் – தொல்லியல் துறை
தமிழ்ப்பல்கலைக் கழகம், தஞ்சை.

யோகேஸ்வரன்
சரளைப்பள்ளம்,
புதுக்கோட்டை மாவட்டம்.

ரமேஷ்,த.
காலியனூர், மேட்டூர் வட்டம்
சேலம் மாவட்டம்.

ஸ்ரீனிவாசதேசிகன், வி.என்.
சென்னை.

# TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

## RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2007

| | | | |
|---|---|---|---|
| Opening Balance :<br>Cash in hand | 408.05 | Printing | 36,110.00 |
| | | Xerox & Stationary | 2,704.25 |
| Cash at Bank<br>Indian Bank, | 5,001.00 | Audit Fees | 850.00 |
| SBI, TNJ | 12,411.95 | Salary | 2,000.00 |
| Sale of Books | 9,520.00 | Honorarium | 4,000.00 |
| Membership Fees | 20,700.00 | Postage & Courier | 2,693.00 |
| Interest | 12,495.17 | Freight Charges | 572.00 |
| Donation | 15,000.00 | Bank Charges | 515.00 |
| ICHR Grand | 22,500.00 | Travelling Expenses | 1,476.00 |
| Fixed Deposit | 2,40,000.00 | Fixed Deposit | 2,55,000.00 |
| | | Telephone Charges | 40.00 |
| | | Gift & Compliments | 4,800.00 |
| | | **Closing Balance** | |
| | | SBI, Thanjavur | 20,872.12 |
| | | Indian Bank, TNJ | 6,230.00 |
| | | Cash in Hand | 173.80 |
| | **3,38,036.17** | | **3,38,036.17** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St., Thanjavur - 1

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

### INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2007

| | | | |
|---|---|---|---|
| To Printing Charges | 36,110.00 | By Sales of Books | 9,520.00 |
| To Xerox & Stationary | 2,704.25 | By Membership Fees | 20,700.00 |
| To Audit Fees | 850.00 | By Interest | 12,495.17 |
| To Salary | 2,000.00 | By Donation | 15,000.00 |
| To Honorarium | 4,000.00 | By ICHR Grant | 22,500.00 |
| To Postage & Courier | 2,693.00 | | |
| To Freight Charges | 572.00 | | |
| To Bank Charges | 515.00 | | |
| To Travelling Expenses | 1476.00 | | |
| To Telephone Charges | 40.00 | | |
| To Gift & Compliments | 4,800.00 | | |
| To Excess of Income Over Expenditure | 24,454.92 | | |
| | **80,215.17** | | **80,215.17** |

### BALANCE SHEET AS ON 31.03.2007

| LIABILITIES | | ASSETS | |
|---|---|---|---|
| FUND ACCOUNT :<br>Opening Balance | 2,36,821.00 | Fixed Deposit | 2,55,000.00 |
| Add<br>Excess of Income over Expenditure | 24,454.92 | Furniture | 11,000.00 |
| | **2,61,275.92** | Cash at Bank :<br>Indian Bank, TNJ | 6,230.00 |
| Creditors | 32,000.00 | SBI, TNJ | 20,872.12 |
| | | Cash in hand | 173.80 |
| | **2,93,275.92** | | **2,93,275.92** |

(Sd.) V.Ramasamy
Chartered Account
951, East Main St., Thanjavur - 1

# AVANAM

## Annual issue of the Tamilnadu Archaeological Society

Avanam aims at bringing to lime light all kinds of primary sources, which unravel the history of Tamilnadu. It carries reports on the hitherto unpublished epigraphs, copper plate records, palm leaf manuscripts, paper documents, archaeological artifacts, coins, art objects and articles. It is a treasure house of original resources to be adorned in the library of each and every one, who is interested in the history of Tamilnadu.

| | |
|---|---|
| **Avanam** 1 – 2 | not available |
| **Avanam** 3 – 14 | Rs. 100/- (per copy) |
| **Avanam** 15 – 18 | Rs. 150/- (per copy) |

Those who wish to buy the back volumes of the **Avanam** may send a D.D. or Cheque for Rs.100/- (per copy), drawn in favour of the **Tamilnadu Archaeological Society,** to the Treasurer, C/o Department of Epigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 005. Cheques should be sent with an additional amount of Rs.100/- to meet the Bank commission.

Those who wish to become life members may send Rs.1000/- to the Treasurer.

Those who want to get their newly published books reviewed in the **Avanam** should send three copies of the book to be reviewed, along with a sum of Rs.50/- for postal expenditure, to the Secretary.

Noburu Karashima, **Varalarruppokkil Thennagacchamugam,** Rs.100/-
Kaveri Rs. 450/-
Ancient and Medievel Commercial Activities in the Indian Ocean Testimonly of Inscriptions and Ceramic - Sherds, Rs.300/-

Address to be contacted

Secretary / Treasurer
Tamil Nadu Archaeological Society,
C/o. Department of Epigraphy and Archaeology,
Tamil University, Thanjavur - 613 005.

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

**ஆவணம்** தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும், ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் நூலகங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

| | |
|---|---|
| ஆவணம் 1 - 2 | இருப்பு இல்லை |
| ஆவணம் 3 - 14 | ரூ.100/- (இதழ் ஒன்றுக்கு) |
| ஆவணம் 15 - 18 | ரூ.150/- (இதழ் ஒன்றுக்கு) |

நொபொரு கராஷிமா, ***வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம்*** - ரூ.100/-
காவேரி, (Kaveri) - ரூ.450/-
Ancient and Medievel Commercial Activities in the Indian Ocean
Testimonly of Inscriptions and Ceramic - Sherds (நொபொரு கராஷிமா) - ரூ.300/-

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெறவிழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ.1000/-

நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ.2000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ.50/-ம் செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் கூடவே வங்கிப் பிடித்தம் ரூ.100/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழ் நேரில் பெற்றுக் கொள்ளலாம். அல்லது அஞ்சலில் பெற ரூ.50/- மணியார்டர் அனுப்பவும்.

**முகவரி**
செயலர்/பொருளாளர்
தமிழகத் தொல்லியல் கழகம்
(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613 010.

Contact :
Secretary/Treasurer, Tamil Nadu Archaeological Society
C/o Department of Epigraphy and Archaeology
Tamil University, Thanjavur - 613 005.